Released by Maran's Dog ,Toronto, Canada

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 19

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

10—4—1950 விரோதிஹூ பங்குனிமீ

## எம்பெருமானாரும்—திருவரங்கத்தமுதனாரும்

Released by Maran's Dog ,Toronto, Canada

உலகுக்கெல்லாம் ஒருயிராய் ஆரியர்கட்கெல்லாம் ஆரியரான எம்பெருமானார் விஷயத்தில் கவிபாடின புலவர்கள் பலர் இருந்தாலும், அவர்களுள் திருவரங்கத்தமுதனாரென்னு மாசிரியர்க்குண்டான ஏற்றம் ஒப்புயர்வற்றதாகும்.' மணவாளமாமுனிகளின் திருவடிகளைப்பணிந்து உய்ந்தவரான எறும்பியப்பாவின் பெருமையைச் சொல்லவந்த ஒருச்லோகம் உலகில் ப்ரஸித்தமானது; அதாவது—

"சடரிபுரேக ஏவ கமலாபதிதிவ்யகவி:
மதுரகவிர் யதா ச சடஜிந்முநிமுக்யகவி:,
யதிகுலபுங்கவஸ்ய புவி ரங்கஸுதாகவிராட்
வரவரயோகிநோ வரதராஜகவிச் ச ததா."

என்பதாம். இதன் பொருள்யாதெனில், திருமகள் கொழுநனை ஸர்வேச்வரனைக் கவிபாடித்துதித்தவர்களுள் நம்மாழ்வார் எப்படி சிறப்புப் பெற்றவரோ, அந்த நம்மாழ்வாரைக் கவிபாடித் துதித்தவர்களுள் ஸ்ரீ மதுரகவிகள் எப்படி சிறப்புப் பெற்றவரோ, எம்பெருமானாரைக் கவிபாடித் துதித்தவர்களுள் திருவரங்கத்தமுதனார் எப்படி சிறப்புப்பெற்றவரோ, அப்படியே மணவாளமாமுனிகளைக் கவிபாடித் துதித்தவர்களுள் எறும்பியப்பா சிறப்புப் பெற்றவர்—என்பதாம்.

Released by Maran's Dog ,Toronto, Canada

உண்மையில், எம்பெருமானாருடைய திருக்குணங்களைப் புகழ்ந்து பேசப்பிறந்த நூல்களுள் திருவரங்கத்தமுதனார் திருவாய்மலர்ந்தருளிய இராமாநுச நூற்றந்தாதிக்கு இணையானது எதுவுமில்லையென்று சபதமிட்டுரைப்பர் பெரியோர். சொல்நோக்கும் பொருள்நோக்கும் தொடைநோக்கும் நடைநோக்குமாகிய எந்நோக்கும் மிக அற்புதமாகவன்றோ நூற்றந்தாதியில் அமைந்துள்ளது.

Released by Maran's Dog ,Toronto, Canada



அமுதனாருடைய வரலாற்றைப்பற்றிச் சிறிது பேசுவோம். இவர் பங்குனித் திங்களில் ஹஸ்த நக்ஷத்திரத்தில் மூங்கிற்குடியென்னும் சிறந்த திருவம்சத்தில் தோன்றித் திருவரங்கம் பெரியகோயிலில் இருந்துவந்தார். பெரியகோயில் நம்பி யென்று முதலில் இவர்க்கு ப்ரஸித்தி இருந்துவந்தது. அஷ்டப்பிரபந்தம் செய்தருளினவரும் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவருமான பிள்ளைப்பெருமாளையங்கார்க்கு இவர் திருத்தகப்பனாரென்று சிலரும் பாட்டனாரென்று சிலரும் சொல்லுவர்.

இவர் ஸகல சாஸ்திரங்களையும் அதிகரித்து மஹா நிபுணராய்த் தமக்குக் குலக்ரமமாகக் கிடைத்த ஸன்னிதி புரோஹித வ்ருத்தியையும் புராணம் வாசிக்கும் கைங்கர்யத்தையும் பெற்று ஸாமாந்யராய் வாழ்ந்துவரும் நாளிலே, எம்பெருமானார் தமது இயற்கையின்னருளாலே இவரைத் திருத்திப்பணி கொள்ளத் திருவுள்ளம்பற்றிக் கூரத்தாழ்வானுக்கு நியமித்தருள, ஆழ்வானும் அவரை அநுவர்த்தித்து ஞானச்சுடர்கொளுத்தி எம்பெருமானார் திருவடிக்கீழ் கொண்டுவந்து சேர்க்க, எம்பெருமானாரும் அவரைக்குளிரக் கடாக்ஷித்தருளி ஆழ்வான் பக்கலிலேயே ஆச்ரயிக்கும்படி நியமித்தருள, அப்படியே அவர் ஆழ்வானிடத்தில் திருவிலச்சினை [சங்கசக்ராங்கனம்] பெற்று, தத்வஹித புருஷார்த்தங்களை நன்குணரப்பெற்று ஆத்ம ஆத்மீயங்களை அந்த ஆசார்யன் திருவடிகளிலே ஸமர்ப்பித்துப் பரமப்ரவணராயிருந்தார்.

Released by Maran's Dog ,Toronto, Canada

இப்படியிருக்கையில், ஸ்வாசார்யரான ஆழ்வானுடைய திருவுள்ளவுகப்புக்காக ப்ராசார்யரான எம்பெருமானார் விஷயமாகச் சில பிரபந்தங்கள் இயற்றவேணுமென்னும் அவா இவர்க்கு உண்டாக, ஒன்றிரண்டு பிரபந்தங்களைச் செய்து அவற்றை எம்பெருமானார் ஸன்னிதியிலே கொண்டுவைத்தார். எம்பெருமானாரும் அவற்றை அவிழ்த்துக் கடாக்ஷிக்க, அவை தம் திருவுள்ளத்திற்கு இசைந்திராமையாலே உபேக்ஷித்திருந்தார். அப்படி ஸ்வாமி திருவுள்ளத்தில் வெறுப்பு உண்டானதற்கு யாது காரணமென்று இவர் விமர்சிக்கையில், தாம் இயற்றிய பிரபந்தம் ஸ்வாமி திருவுள்ளத்திற்குப் பாங்காக அமைந்திலது என்று தெரிந்து கொண்டார். ஸ்வாமி கற்ற கல்விகளின் விரிவையும் அவர் பாஹ்யகுத்ருஷ்டி மதங்களைக் களைந்தொழித்து வெற்றி பெற்ற வரலாறுகளையும் பரக்கப் பேசியிருந்தாராம் அப்பிரபந்தத்தில். ஆழ்வார்கள் பக்கலிலும் அவர்களது ஈரச் சொற்களிலும் ஸ்வாமிக்கு இருந்த ஈடுபாடு மிகவும் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருந்ததாம். இத்தகைய துகிவகையில் ஸ்வாமி திருவுள்ளம் சிறிதும் உகப்புக் கொள்ளவில்லையென்று தெரிந்த பின்னர், அவர் தம் திருவுள்ளத்திற்குப் பாங்காக வேறொரு பிரபந்தத்தைப் பணித்துத் திருவடி வாரத்தில் கொணர்ந்து ஸமர்ப்பித்தார். இப்போது அநுஸந்தானத்திலுள்ள இராமாநுசநூற்றந்தாதியே அது.

Released by Maran's Dog ,Toronto, Canada

ஸ்வாமி அதனைக் கடாக்ஷித்தருளிப் புன்முறுவல் கொண்டிருந்தார். அப்போது ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலான அந்தரங்கசிஷ்யர்கள் யாவரும் அப்பிரபந்தத்தை உற்று நோக்கி, அதில் ஸ்வாமியின் திருவுள்ளவுகப்பையும் விசேஷித்தறிந்து மிக்க குதூஹலங் கொண்டு. "இப்பிரபந்தம் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களோடொக்கப் பரிக்ராஹ்யமாம்படி நியமித்தருளவேணும்" என்று திருவடிகளைப் பிடித்துக்கொண்டு பிரார்த்திக்க, ஸ்வாமி அதற்கு ஸஹஸா இசைந்தருளவில்லை. குசலவர்கள்பாடின ஸ்ரீராமாயணத்தை இராமபிரான் கேட்டருளி மிகவுமுகந்து "மமாபி தத் பூதிகரம்" என்று கொண்டாடின வரலாற்றை எடுத்துரைத்து அனைவரும் நிர்ப்பந்திக்க, இத்தனை பேருடைய குதூஹலத்திற்கு நாம் பங்கம்

விளக்கலாகாதென்று ஸ்வாமி திருவுள்ளம்பற்றி, அழகியமணவாளனுடைய நியமனத்தையும் பெற்று அப்படியே நியமித்தருளினர். ஸ்வாமி எழுந்தருளியிருந்த காலத்திலேயே இப்பிரபந்தம் ஸன்னிதிகளிலும் திருமாளிகைகளிலும் ஸேவிக்க உபக்ரமமாயிற்று. திருக்கார்த்திகைக்குப் பிறகு அதத்யயநக்ரமம் திவ்யப்பிரபந்தங்களுக்குப் போலவே இந்த நூற்றந்தாதிக்கும் அன்று தொட்டு எங்கும் நிகழ்ந்து வரக் காண்கையாலே இதற்கு திவ்யப்ரபந்தத்தோடு ஸர்வாத்மநா ஸாம்யம் பூர்வாசார்ய ஸம்மத மாயிற்றென்பது அறியத்தக்கது.

உபதேச ரத்தினமாலையில் கண்ணிநுண்சிறுத்தாம்பையும் ப்ரஸ்தாவித்து —* வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல், சீர்த்தமதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழ் ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே, சேர்வித்தார் தாற்பரியந் தேர்ந்து * என்றருளிச் செய்த மணவாளமாமுனிகள் இராமாநுச நூற்றந்தாதியைப்பற்றி ஒன்றுமருளிச் செய்யாததேன்? திருவரங்கத்தமுதனர்க்கு நாள்பாட்டும் பணிக்கவில்லையே, ஏன்? என்று சிலர் கேட்பதுண்டு.

நூற்றந்தாதிக்கும் அமுதனர்க்குமாகவே உபதேச ரத்தினமாலையில் * இன்றுலகீர் சித்திரையிலேய்ந்த திருவாதிரை நாள் * என்று தொடங்கி மூன்று பாசுரங்கள் அருளிச் செய்தது. திருக்குருகைப்பிரான்பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாசார்யர் முதலான ஆசார்யர்களைப் பற்றியும் உபதேச ரத்தினமாலையில் ப்ரசம்ஸையிருந்தாலும் அவர்கள் அவதரித்தமாதமோ நக்ஷத்ரமோ அதில் பேசப்படவில்லை. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்கள் பணித்தவர்களுக்குமாத்திரமே *மாதங்கள் நாள்கள்தமை மண்ணுலக கார்தாமறிய ஈதென்று சொல்லியுள்ளார். அந்த வரிசையில் "சித்திரையில் செய்ய திருவாதிரை" என்று நாள்பாட்டு அமைத்திருப்பதை ஆழ்ந்து நோக்கவேணும். திவ்யப்பிரபந்தமருளிச் செய்யாத எம்பெருமானர்க்கு, மதுரகவிகட்கடுத்தபடியாக நாள்பாட்டு அமைத்தது இராமாநுச நூற்றந்தாதிக்காகவே யென்பது சொல்லவும் வேண்டுமோ? இங்கு, ப்ரபந்தவக்தாவைக் காட்டிலும் ப்ரபந்த ப்ரதிபாத்யர்க்கு ஏற்றம் ஸர்வஸம்ப்ரதி பந்நமாயிருக்கையாலே அமுதனருடைய ஸ்தானத்தில் ஸ்வாமி தம்மையே அமைத்தது ஔசித்யசாலியே யாம்.

நாலாயிரத்திற்கும் வியாக்கியானஞ் செய்தருளின பெரியவாச்சான் பிள்ளை நூற்றந்தாதிக்கு ஏன் வியாக்யானஞ் செய்தருளவில்லை யென்று சிலர் விமர்சிப்பதுண்டு. ஸ்தோத்ரரத்நத்திற்கு வியாக்யானஞ் செய்தருளினவர் பஞ்சஸ்தவாதிகளுக்கு வியாக்கியானஞ் செய்தருளவில்லை யென்பதனல் ஒரு குறையில்லையே, அதுபோலவே யிங்குமென்று ஸமாஹிதராகலாம். அமுதனருடைய திருவம்சத்திலொருவர் நூற்றந்தாதிக்கு வியாக்கியான மிட்டிருந்தாரென்றும், அது லோபித்ததனல் மணவாளமாமுனிகள் வியாக்கியானித்தருளினரென்றும் கேட்டிருந்ததுண்டு.

நூற்றந்தாதியின் திருவவதாரத்தைப்பற்றி மற்றொருவிதமான ஐதிஹ்யமும் பெரியார் பக்கலில் கேட்டிருந்ததுண்டு; எங்ஙனே யெனின்; அமுதனர் இப்பிரபந்தம் இட்டருள்வதாக அடையவளைந்தான் திருமதிலுக்கு இவ்வருகேயிருந்த ஒரு தென்னஞ் சோலைத் திருமண்டபத்தில் வீற்றிருந்து பட்டோலை கொண்டிருக்கும் போது எம்பெருமானர் கூரத்தாழ்வான் முதலான சில அந்தரங்க சிஷ்யர்களோடு அவ்விடத்தே யெழுந்தருளினராம்; அப்போது * செழுந்திரைப்பாற்கடல் என்கிற நூற்றைந்தாம் பாசுரம் தலைக்கட்டி * இருப்பிடம் வைகுந்த மென்கிற பாசுரம் எழுத வேண்டிய தருணமாயிருந்ததாம்; அது முத

லான மூன்று பாசுரங்களும் எம்பெருமானர் திருமுன்பே தொடுக்கப்பட்டனவாம். பிறகு அரங்கேற்றியானபின் "இந்த விசேஷத்திற்கு ஸ்மாரகமாக இப்பிரபந்தத்திற்கு மாத்திரம் சாற்றுப்பாசுரங்கள் மூன்ருயிருக்கட்டும்" என்று ஆழ்வான் நியமித்தருளினாம். ஆனது பற்றியே மற்றைப் பிரபந்தங்களுக்கு இரண்டு பாசுரம் சாத்துப்பாசுர மாயிருப்பது போலல்லாமல் இப்பிரபந்தத்திற்கு மூன்று பாசுரம் சாத்துப்பாசுரமாக ஸம்ப்ரதாயம் நிகழ்கின்றது—என்று. இவ்வைதிஹ்யம் * இருப்பிடம் வைகுந்த மென்கிற பாட்டின் ப்ரமேயத்திற்கு மிகவும் பொருந்தியிருக்கும்.

இந்த நூற்றந்தாதி போல் மற்றும் பல பிரபந்தங்களும் ஸ்வாமி விஷயமாகத் திருவவதரித்திருந்தன வென்பது இதுதன்னில் ஆருவது பாசுரத்தினல் அறியலாகிறது; "இயலும் பொருளுமிசையத் தொடுத்து ஈன்கவிகளன்பால் மயல் கொண்டு வாழ்த்து மிராமானுசனே" என்றது காண்க. அப்படிப்பட்ட பிரபந்தங்களெல்லாம் பகல்விளக்கும் மின்மினியுமாகி இப்பிரபந்தமொன்றே சிறப்புற்று விளங்குவதற்குக் காரணம் இதிலுள்ள சப்தகாம்பீர்யமும் அர்த்த புஷ்டியுமாகும்.

ஸ்வாமிகாலத்திலே ஸ்வாமி நியமனங்கொண்டே கருட வாஹனபண்டிதர் பணித்த திவ்யஸூரிசரித்தில் பதினெட்டாம் ஸர்க்கத்தில் (51.)

"[illegible]
[illegible]"

"ஸ்ரீரங்காம்ருதகவிராஹ ரங்கிப்ருத்ய: தச்சிஷ்யோ யதிபதிவைபவாநுபந்தம்,
அந்தாதித்ரமிடகிரா மஹாப்ரபந்தம் காதாநாம் அம்ருதமுசாம் யுதம் சதேந."

என்னும் ச்லோகத்தில் இப்பிரபந்தத்தின் பெருமை பேசப்பட்டுள்ளது. இதன் பொருளாவது, திருவரங்கத்தமுதனர் அமுதப்பெருக்கான தமிழ்மொழியாலே எம்பெருமானருடைய வைபவங்களைப் பேசுகிற நூற்றந்தாதிப்ரபந்தத்தை யருளிச் செய்தாரென்பதாம்.

இந்நூற்றந்தாதியில், ஸ்வாமிக்கு ஆழ்வார்கள் பக்கலிலும் ஆசாரியர்கள் பக்கலிலுமிருந்த ப்ராவண்யாதிசயம் மிக அற்புதமாகப் பேசப்பட்டிருக்கின்றது. பாசுரம் தொடங்கும்போதே * மாறனடி பணிந்துய்ந்தவன் * என்றும், உடனே * குறையல்பிரானடிக் கீழ் விள்ளாதவன்பனிராமானுசன் * என்றும் அருளிச் செய்தது ஸ்வாமியின் உண்மையான வைபவத்தை விளக்குகின்றது. பொய்கையார் பூதத்தார் முதலான ஒவ்வோராழ்வார் திறத்திலும் ஸ்வாமிக்கிருந்த பக்தியின் கனம் பல பாசுரங்களினல் பேசப்பட்டிருக்கின்றது. விசேஷித்து, நம்மாழ்வார் பாசுரங்களையும் திருமங்கையாழ்வார் பாசுரங்களையுங்கொண்டே ஸ்வாமி வாழ்ந்தருளினரென்பது இப்பிரபந்தத்தில் அடிக்கடி காட்டப்படுகிறது. (19.) * உறுபெருஞ் செல்வமும் * (29) * கூட்டும் விதி யென்று கூடுங்கொலோ * (46) * கூறுஞ்சமயங்களாறுங்குலைய * (54) * நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன * (64) * பண்டருமாறன் பசுந்தமிழ் * (88) * கலிமிக்க செந்நெல் கழனிக்குறையல் * என்கிற பாசுரங்கள் விசேஷித்து நோக்கத் தக்கன. ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார் முதலான பரமாசார்யர்கள் திறத்தில் ஸ்வாமிக்கிருந்த பத்திப் பெருங்காதல் 20, 21 முதலான சில பாசுரங்களில் பேசப்பட்டது. கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திவ்ய தேசங்களிலுண்டான ஆதராதிசயம் 31, 35, 42, 47, 49, 76, 81, 91, 106 முதலான பாசுரங்களில் பேசப்பட்டுள்ளது. இதிஹாஸச்ரேஷ்டமான ஸ்ரீ ராமாயணத்தில் இருந்த

அபரிமிதமான ஈடுபாடு (37) * படிகொண்ட கீர்த்திராமாயண மென்னும் பக்தி வெள்ளம்* என்கிற பாசுரத்தில் பகரப்பட்டது. கீதாபாஷ்யம் முதலான திவ்யக்ரந்தங்களை யருளிச் செய்து பரசமயப்பொருள்களைப் பாறவடித்தபெருமை பல பாசுரங்களிற் பேசப்பட்டது. ஸ்வாமியின் ஸகலகலாவல்லபத்வம் (44) * சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவறநெறி யாவுந் தெரிந்தவன் * என்பது முதலான பாசுரங்களிற் கூறப்பட்டது.

மிகவும் ஸாரமாகச் சில பாசுரங்கள் அமைந்துள்ளன; அவற்றையெடுத்துச் சிறிது விவரிப்போம். (41.) [* மண்மிசை யோனிகள் தோறும்பிறந்து.*] எம்பெருமானுடைய அவதாரத்திற்காட்டிலும் எம்பெருமானாருடைய திருவவதாரம் மிகச் சிறப்புற்றதென்கிறு ரிதில். * அஜாயமாநோ பஹுதா விஜாயதே* என்றும் * உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய் இமையோர் தலைவா * என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமான் பல பல யோனிகளில் பலவகைப் பிறவிகள் பிறந்து கண்காண வந்து நின்று உபதேசாதிகளாலே ஸ்வஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுத்த விடத்திலும் யாரும் அவனைப் பொருள் படுத்தவில்லை; * அவஜாநந்தி மாம் மூடா: * [மூடர்கள் என்னை அவமானப் படுத்துகிறார்கள்] என்று தானே சொல்லிவருந்தவேண்டியதாயிற்று. ஆகவே பகவானுடைய அவதாரம் ஸம்ஸாரிகளினுடைய தெள்ளறிவுக்கு உறுப்பாகவில்லை. ஸ்வாமியின் திருவவதாரமோ வென்னில், மிக்க பயன் பெற்றது. இவர்தாம் திருவவதரித்தவுடனே எல்லாவுலகத்தாரும் ஆச்சரியமான ஞானத்தைப் பெற்று உஜ்ஜீவித்தார்கள்—என்பது இப்பாசுரத்தின் கருத்து.

(60) * உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும்* இத்யாதி. ஸ்வாமியெழுந்தருளியிருக்குமிடங்கள் சொல்லுகிறது இப்பாட்டில். ஞானம் தலையெடுத்த மஹான்களின் திரள் எங்கெங்கிருக்கிறதோ அங்கெல்லாமெழுந்தருளியிருப்பர்; திருவாய்மொழியின் பரமபோக்யமான இசை எங்கெங்கு நிகழ்கின்றதோ அங்கெல்லாம் ஸேவை ஸாதிப்பர்; ச்ரிய: பதியான ஸர்வேச்வரன் கோயில் கொண்டிருக்கும் திவ்யதேசங்கள் தோறும் புகுந்து நிற்பர்—என்கிறது இதில். "திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும்" என்றது இதில் பரமார்த்தமான வார்த்தையாகும். ஸ்வாமி திருவுள்ளமுகந்த பேச்சுக்களில் இது தலையானது.

(66·) * ஞானங்கனிந்த நலங்கொண்டு. * இப்பாட்டு மிகமிக இன்சுவையுடையது. அடியார்களுக்கு மோக்ஷமளிக்கிற அதிகாரம் எம்பெருமானுக்கு முண்டு, எம்பெருமானாருக்கு முண்டு. ஆனால் எம்பெருமான் மோக்ஷமளிப்பது மிகவும் சிரமப்படுத்தியே; எம்பெருமானார் அளிப்பது தம்முடைய நிர்ஹேதுக கிருபையினாலே—என்கிறது இதில். இப்பாட்டின் திவ்யார்த்ததீபிகையுரையில் அடியேன் விரித்துரைத்துள்ளதையும் ஈண்டெடுத்துக்காட்ட விரும்புகின்றேன். (அதாவது) மோக்ஷமென்கிறவொரு சரக்கு எம்பெருமானாகிற கடையிலும் எம்பெருமானாராகிற கடையிலும் கிடைக்கக் கூடியது; உலகில் கடைகளுக்கு மூன்று விதமான அஸௌகரியங்கள் இருக்கக்கூடும். அவையாவன—சரக்கின் விலையை மிகவும் ஏற்றிச்சொல்லுதல், அந்த விலையில் சிறிதும் குறைக்க இடம்தாராமல் 'கறார் விலை' என்று கட்டளைப் படுத்துதல்; 'அதிகவிலையும் கறார்விலையுமாயிருந்தாலும் தற்காலம் கடனாகக் கொடுத்தால் சில நாட்களில் விலை கொடுத்துவிடுவோம்' என்றால் அதற்கும் இசையாமல் 'கடன்கட்டில்லை, கைமேல் விலைகொடுத்தாகவேண்டும்' என்று வற்புறுத்தல்—

என்பனவாம். இவற்றுக்கெதிர்த்தட்டாக மூன்றுவகையான ஸௌகரியங்களுமுண்டு; லகுவான விலைக்கு விற்றல், கூறுர் விலையென்னுமல் பேரம்பேச இடங்கொடுத்தல், கடனாக வுங்கொடுத்தல் என்பனவாம். முன்னே சொன்ன அஸௌகரியங்கள் நிரம்பியகடையின் ஸ்தானத்தில் எம்பெருமானைக் கொள்ளவேணும். பின்னே சொன்ன ஸௌகர்யங்கள் நிரம்பிய கடையின் ஸ்தானத்தில் எம்பெருமானாரைக் கொள்ளவேணும். எங்ஙனேயெனின்;

எம்பெருமான் மோக்ஷமாகிற சரக்குக்கு விலையை அபரிமிதமாக ஏற்றி விதித்து வைத்தான்—* ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடோறும் நைபவேண்டுமென்கையாலே இந்த விலை எல்லாரும் எளிதாகச் செலுத்த முடியாதாகையால் விலை அபரிமிதமென்பது தெரிந்தது. இதில் சிறிது குறைத்துக்கொள்ளலாமோ? என்றால் இசைகிறானில்லை; ஞானங் கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கே வானங்கொடுப்பே னென்கிறான்; ஆகவே பேரம்பேச முடியாத தன்மையாயிருக்கிறது. இப்படிப்பட்ட நிலைமை இவ்விருள்தருமா ஞாலத்திலுண்டாவது அருமையாதலால் 'எங்களை முன்னடி மோக்ஷத்திற்கு அனுப்பிவிடு, அங்குப்போய் இந்த விலையைச் செலுத்திவிடுகிறோம்' என்று கடன் வேண்டினால் அதற்கும் இசைகின்றிலன்; இங்கேயிருந்து ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்களைத் தான் மோக்ஷத்திற்கனுப்புவே னென்கிறான். ஆகவே எம்பெருமானாகிற கடை மூன்று வகைப்பட்ட அஸௌகரியங்களும் நிரம்பியதென்பது தேறிற்று. எம்பெருமானாராகிற கடையில் இவ்வகையான அஸௌகரியம் சிறிதுமில்லை. மோக்ஷமென்னும் சரக்குக்கு அவர் விலை விதிப்பதேயில்லையாதலால் அதிக விலையென்றாவது கூறுர்விலையென்றாவது கைவிலையென்றாவது சொல்லக்கூடிய கஷ்டங்களுக்கு இங்கு ப்ரஸக்தியேயில்லை. கேவலம் தம்முடைய நிர்ஹேதுகக்ருபையினாலேயே திருத்தி முமுக்ஷுத்வத்தை யுண்டாக்கி மோக்ஷ ஸாம்ராஜ்யமும் அளித்தருளுகிறார். ஆனபின்பு, முமுக்ஷுக்களே! நீங்கள் மோக்ஷார்த்தமாக எம்பெருமானைப்பணிந்து வருந்தாமல் எம்பெருமானாரைப்பணிந்து ஸுகப்படுங்கள்—என்று இப்பாட்டால் உபதேசித்தாராயிற்று.

மோக்ஷப்ரதத்வமென்பது எம்பெருமானொருவனுக்கே அஸாதாரணமானதன்றோ; வேறு யாருக்கும் அது கிடையாதென்பது வேதாந்த ஸித்தாந்தமாயிருக்க, எம்பெருமானார் மோக்ஷமளிக்கிறாரென்கிறவிது பொருந்துமோவென்று சிலர் சங்கிக்கக்கூடும்; தேசிகன் ந்யாஸதிலகத்தில் * உக்தே ஸமீ நிஜஸவி வத॰ தெ॰பிகாதெ॰பகா॰க்ஷீ—தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ* என்று, எம்பெருமானும் ஆசார்ய நியமனத்தை எதிர்பார்த்தே திருநாட்டைத்தருகின்றானென்று சொல்லியிருக்கையாலே அவ்வர்த்தமே இங்குத் திடமாகக் கப்பட்டதென் றுணர்க.

இனி, (75) * செய்த்தலைச் சங்கம் செழுமுத்தமீனும் * என்கிற பாட்டிலும், (76) * நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும் * என்கிறபாட்டிலும்—ஸ்வாமியிடத்தில் * தேவுமற்றறியாத பத்திப்பெருங்காதல் தமக்குள்ளமையை அற்புதமாக வெளியிடுகிறார் அமுதனார். எம்பெருமான் தனது விலக்ஷணமான அழகைக் காட்டிக் கொண்டுவந்து என் கண்ணெதிரே நின்றாலும் என்னை விடாதே வலியப் பற்றினாலும் அவனுடைய அழகில் நான் மோஹிக்கப்பெறுவதில்லை, தேவரீருடைய திருக்குணங்களே அடியேனை யீடுபடுத்துகின்றன—என்றார் முந்தினபாட்டில். இப்படி அமுதனார் தம்முடைய பரமபக்தியை விண்ணப்பம் செய்யக்கேட்ட எம்பெருமானார் மிகவும் உகந்தருளி 'இவ்வளவு அன்புகொண்ட இவர்க்கு நாம் எதைச்செய்வோம்!' என்று தெகுடாடியிருக்க, ஆதைக் கண்ட அமுதனார்,

'ஸ்வாமிந்! அடியேனுக்கு தேவரீர் வேறெதுவும் செய்தருளவேண்டா; அடியேனுக்கு ஸர்வஸ்வமாகிய இத்தத் திருவடித்தாமரைகளைத் தந்தருள வேணுமென்கிறார் * நின்றவண் கீர்த்தியுமென்கிறபாட்டில். இப்பாட்டின் சீரியபொருளைச் சிறிது விவரிப்போம்; திருமலையும் திருநாடும் திருப்பாற்கடலுமாகிய இத்தலங்களெல்லாம் ஸ்வாமிந்! தேவரீருக்கு எப்படிப்பட்ட ஆனந்தத்தை விளைக்குமோ அப்படிப்பட்ட ஆனந்தத்தை அடியேனுக்கு தேவரீருடைய திருவடிகள் விளைக்கும். * ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டுநாம் * என்று நம்மாழ்வார் பாரித்தாப்போலத் திருமலையப்பனுக்குக் கைங்கரியம் பண்ணவேணுமென்று அடியேன் விரும்பவில்லை; நம்மாழ்வாருகந்த விஷயமென்று தேவரீருகந்திருக்கலாம். * மாகவைகுந்தம் காண்பதற்கு என்மனமேகமெண்ணு மிராப்பகலின்றியே * என்று ஆழ்வார் விரும்பின திருநாட்டிலும் அடியேனுக்கு விருப்பமில்லை; அதையும் ஆழ்வாருகந்த திருநாடென்று தேவரீருகந்திருக்கலாம். * பொங்கிய பாற்கடல் பள்ளி கொள்வானைப் புணர்வதோராசை * என்று ஆண்டாள் விரும்பினாப்போலே திருப்பாற்கடல் நாதனோடு அணையவேணுமென்கிற விருப்பமும் அடியேனுக்கில்லை; அதனையும், நம் தங்கையுகந்த விஷய மென்று தேவரீருகந்திருக்கலாம் : உண்மையில் அடியேனுகந்த விஷயம் எது வென்றால் 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்பதொன்றேயாம். ஆன பின்பு அடியேனுக்கு இத்திருவடிகளையே சேமவைப்பாகத் தந்தருளவேணு மென்று ப்ரார்த்தித்தாராயிற்று.

இப்படிப் பட்ட இன்சுவை மிக்க பொருள்களைக் கொண்ட பாசுரங்கள் நிறைந்த இந்நூற்றந்தாதிக்கு ப்ரபந்நகாயத்ரி யென்று பெரியார் இட்ட திருநாமம் மிகப் பொருந்தும்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

# பிருந்தாவனம் ஸந்நிதி.

வடதிசை மதுரைக்கடுத்த பிருந்தாவனத்தில் விச்வப்ரஸித்த வைபவசாலியான ஸ்ரீமத் கோவர்த்தனம் ஆத்ய. ரங்காசார்ய ஸ்வாமியால் திருப்ரதிஷ்டை செய்விக்கப்பட்ட ரங்கஜீ மந்திர மென்று ப்ரஸித்தமான ரங்கமன்னார் ஸந்நிதியானது நாளது ஆனிமாதத்தோடு ஒரு நூறாண்டு முடியப் பெறுகின்றது. அந்த ஸமயவிசேஷத்தில் ஷை ஸந்நிதியில் விசேஷக் கொண்டாட்டத்தை மிகவும் விமரிசையாக நடைபெறுத்திக் களிக்கவேணுமென்று ஸந்நிதி நிர்வாஹகர்கள் குதூஹலம் கொண்டிருக்கிறார்களென்று தெரியவருகின்றது நாற்பது வருஷங்களுக்கு முன்பு அறுபதாண்டு நிறைவுவிழா விசேஷ வைபவமாக நடத்தப்பட்டதென்று கேள்விப்படுகிறோம். அதிற்காட்டிலும் அதிக வைபவமாக இப்போது நடத்தப்படுமென்று தெரியவருகிறது. முன்பு ஆனிமாத ரேவதியில் ஷை ஸந்நிதி திருப்ரதிஷ்டை நடந்தேறின படியால் இப்போதும் வரப்போகிற ஆனிமாத.ரேவதிக்குச் சார்பாகவே சதாப்த பூர்த்திக் கொண்டாட்டம் நடைபெறு மென்று கேள்விப்படுகிறோம். ஷை கொண்டாட்டத்தை எவ்விதமாக நடத்துவதென்று ஸந்நிதி நிர்வாஹக ஸமிதியார் ஆலோசித்துக் கொண்டிருப்பதாகவும். லோகோத்தரமான வைபவங்களுடன் ஒரு ப்ரஹ்மோத்ஸவம் நடத்துவது நன்

றென்று ஒரு அபிப்ராய மிருந்து வருகிறதாகவும் தெரிகின்றது. இது மிகவும் உத்தமமான ஆலோசனை.

நமது தென்னாட்டினர் பெரும்பாலும் பிருந்தாவனம் ஸன்னிதியை ஸேவித்திருப்பர்கள். ஸேவிக்கப் பெருதவர்களும் பலர் இருக்கக்கூடும். வடநாட்டில் அப்படிப்பட்ட ஆச்சரியமான ஸன்னிவேசமமைந்த தேவாலயம் வேறு எங்கும் கிடையாது. தென்னாட்டுத் திருப்பதிகளின் ஸன்னிவேசம்போலவே அற்புதமாகப் பொலிந்துள்ளது. கோபுரங்களும் பிராகாரங்களும் திருவீதிகளும் திருமாளிகைகளும் புஷ்கரிணியும் நித்யாராதன வைகரிகளும் நித்யநைமித்திகாதி உத்ஸவ வொழுங்குகளும் கோயில் திருமலை பெருமாள் கோயிலென்னும் திவ்யதேசங்களின் தோரணையாகவே அமைந்திருக்குமழகு அவரவர்கள் ஸாக்ஷாத்கரித்தே அறியத்தக்கது.

இந்த ஸன்னிதியின் ப்ரதிஷ்டாபகரான கோவர்த்தனம் ஸ்வாமி ஒரு அவதார புருஷரென்றே மதிக்கத் தக்கவராயிருந்தார். அவர் காஞ்சி ஸமீபத்தில் அகரம் என்கிற அக்ரஹாரத்தில் அவதரித்தவர். ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்கள் வாசிப்பதற்காக வடதேசம் சென்று வாசித்து மஹா வித்வானுகி ப்ருந்தாவனத்திற் கெழுந்தருளினுர். அப்போது அவ்விடத்தில் கோடீச்வரனு யிருந்த ராதாக்ருஷ்ணஸேட் இவருடைய தேஜோவிசேஷத்தைக் கண்டு வியந்து திருவடிகளில் ஆச்ரயித்துத் தன்னுடைய ஸர்வஸ்வத்தையும் இவராதீன மாக்கின வரலாற்றைப் பெரியோர்கள் வெகு ஆச்சரியமாகச் சொல்லுகிருர்கள். அப்போது கோவர்த்தனம் ஸ்வாமி ப்ரஹ்மசர்யாச்ரமத்தில் தான் எழுந்தருளியிருந்தாராம். அவருடைய திருவுருவப்படத்தை ஸேவிக்கையில் அவரது விலக்ஷணமான தேஜஸ்ஸு எப்படிப் பட்டவர்களையும் பரவசமாக்கும். வடநாட்டில் ஸ்ரீவைஷ்ணவ மதப்ரசாரம் செய்தவர்களில் இந்த ஸ்வாமி தலைமை பெற்றிருந்தார். நம்முடைய ஸ்ரீவசநபூஷணுதி ரஹஸ்யக்ரந்தங்களையும் மற்றுமுள்ள ஸம்பிரதாயக்ரந்தங்களையும் ஹிந்தியிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் அந்நாட்டில் விசேஷமாகப் பரவச் செய்த மஹாநுபாவர் இவர்.

நம்முடைய ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு விரோதிகள் அளவற்றவர்கள். அன்னவர்களது உபப்லவங்கள் எப்போதும் எவ்விடத்திலுமுண்டு. ஸ்ரீகோவர்த்தனம் ஸ்வாமியின் காலத்திலும் வடநாட்டில் அது விசேஷமாகத் தலையெடுத்திருந்ததாம். அப்போது ஸ்வாமி வ்யாமோஹவித்ராவணம் என்றொரு பெரியக்ரந்தமியற்றி அச்சிட்டு ப்ரதிபக்ஷங்களை வென்று பெரும்புகழ் படைத்தா ரென்றும் பெரியார் சொல்லக் கேட்டிருக்கிறோம்.

ப்ருந்தாவனம் ஸன்னிதியில் இந்த மஹானுடைய திவ்யமங்கள விக்ரஹமும் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு நித்யாராதன விசேஷோத்ஸவாதி வைபவங்களுடன் பொலிகின்றது. இந்த மஹானுடைய சாச்வத கீர்த்திஸ்தம்பமாகவே ஷை ஸன்னிதி விளங்குகின்றது. இதற்கு சதாப்தபூர்த்தி மஹோத்ஸவக் கொண்டாட்டம் வெகுசிறப்பாக நடைபெற வேண்டியது மிக அவசியமே.

---



ஸ்ரீகாஞ்சீ. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி.

அழகிய மணவாள ராமாநுஜஜீயர் ஸ்வாமி

(ஷஷ்டிஜீயர் ஸ்வாமியென்று ப்ரஸித்தர்)

(வைகுண்டவாஸி.)

ஸ்ரீ:

பொதுவாக ஸகல விஷ்ணுவாலயங்களினுடையவும், சிறப்பாக ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியினுடையவும் பெருமைகளைத் தெரிவிக்கும் சிறுநூல்

# விஷ்ணு கோவில்களும் :: விசேஷதர்ம பரிபாலனமும்.

ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர் எழுதியது

[ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு.]

இதனில் விவரிக்கப்பட்டுள்ள விஷயங்களின் ஸாரம்.

1. விஷ்ணுகோவில்களுக்கு திவ்யப்ரபந்தங்களினாலேயே பெருமையென்பதும்,

2. தேவப்பெருமாள் ஸன்னிதியின் ப்ராசீன நவீன இதிஹாஸங்களும்,

3. ஷை தேவஸ்தானத்தில் அநாதியாக நடந்துவரும் காரியங்களெல்லாம் திவ்யப்ரபந்தங்களுக்கே ஆதிக்யங்கொடுத்து நடந்துவரும் வைபவமும், இதில் மிக விரிவாக நிரூபிக்கப்பட்டுள்ளன. வைகாசியுத்ஸவ வாஹனஸேவைகளெல்லாம் திவ்ய ப்ரபந்த ஸேவையை அநுஸரித்தே ஏற்படுத்தப்பட்டன வென்பதை விரிவாக நிரூபித்திருப்பது இந்நூலின் உயிரானபாகம். அது 26-வது பாராமுதல் காணத்தக்கது.

---

இது கிடைக்குமிடம் :—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

1950 விலை 0—6—0

Released by Maran's Dog ,Toronto, Canada

# விஷயஸூசிகை.

(லக்கம்—பாராக்களின் எண்.)



Released by Maran's Dog ,Toronto, Canada



Released by Maran's Dog ,Toronto, Canada



விஷய ஸூசிகை முற்றிற்று.

# விஷ்ணுகோவில்களும் விசேஷதர்மபரிபாலனமும்.

1. எம்பெருமான் பஞ்சப்ரகார விசிஷ்டனாக சாஸ்த்ரங்களில் கூறப்படுகிறான். பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்னுமிவை பஞ்சப்ராகாரங்களென்று ப்ரஸித்தம். ப்ரமேயங்களில் தலையான எம்பெருமான் தன்னை இங்ஙனே ஐந்து வகையாக வகுத்துக் கொண்டதுபோல ப்ரமாணங்களில் தலையான வேதமும் இவ்வைந்து ப்ரகாரங்களுக்குச் சேர தன்னையும் ஐந்துவகையாக வகுத்துக் கொண்டது. இதனைச் சிறிதுவிவரிப்போம்.

2. எம்பெருமான்பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை(1)பரத்வம் எனப்படும். க்ஷீராப்தியில் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரூபேண வகுப்புண்டு நிற்கும்நிலை(2)வ்யூஹம்எனப்படும். ஸ்ரீராமக்ருஷ்ணதிரூபேண அவதரித்து நிற்கும்நிலை (3) விபவம் எனப்படும். * கரந்தெங்கும் பரந்துளன் * என்று உள்ளே பதிந்துநிற்கும்நிலை (4) அந்தர்யாமித்வம் எனப்படும். கோவில்களிலும் க்ருஹங்களிலும் * தமருகந்த தெவ்வுருவமவ்வுருவமாய் நிற்கும்நிலை (5) அர்ச்சாவதாரமெனப்படும். இவை, ப்ரமேயபூதனான பகவானுடைய பஞ்சப்ராகாரங்கள்.

3. இனி, ப்ரமாணத்தின் பஞ்ச ப்ரகாரங்களைக் கேண்மின்; வேதம் பலவிடங்களிலும் எம்பெருமானுடைய பரத்வநிலையைப் பேசுகையாலே பரத்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை வேதம். (2) எம்பெருமானுடைய வ்யூஹாவஸ்தையின் குணம் ரூபம் க்ருத்யம் முதலானவற்றைப் பேசுகைக்காக வேதமே பஞ்சராத்ரமாக வடிவெடுத்த தாகையாலே, பகவானுடைய வ்யூஹாவஸ்தைக்குச் சேர்ந்த ப்ரமாணநிலை---பாஞ்சராத்ரம். (3.) எம்பெருமானுடைய அந்தர்யாமித்வமானது அக்னி இந்திரன் வருணன் முதலான தேவதைகள் பக்கலிலே யுள்ளது; அவ்வோ தேவதைகளைக் குறித்து நாம் பண்ணுகிற கருமங்கள் அந்தர்யாமியான எம்பெருமானைச் சேருகின்றன வென்பது வேதாந்திகளின் கொள்கை. ஆகவே எம்பெருமானுடைய அந்தர்யாமித்வம் கருமானுஷ்டானத்திற்கு உரியதென்று தேறிற்று. அப்படிப்பட்ட கர்மகலாபங்களை விவரிக்க மநுஸ்ம்ருதி முதலான தரும சாஸ்த்ரங்களாக அந்த வேதமே அவதரித்த படியாலே, அந்தர்யாமித்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை---ஸ்ம்ருதிகள். (4.) அப்பெருமானுடைய ராமக்ருஷ்ணாதி விபவாவதார சேஷ்டிதங்களைப் பேசுவதற்காக அந்த வேதமே ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் முதலிய இதிஹாஸங்களாக ஆவிர்ப்பவித்ததாகையாலே எம்பெருமானுடைய விபவத்திற்குச் சேர்ந்த ப்ரமாணநிலை---இதிஹாஸபுராணங்கள். (5) விபவாவதாரங்களால் ரக்ஷித்தருளு மெம்பெருமான் அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களும் இழவாதபடி மிகவும் ஸுலபனாக அர்ச்சாவதாரமானவளவில் அதன் பெருமையைப் பேசுவதற்காக அந்த வேதமே தானும் ஸர்வஸுலபமாய் ஸர்வாதிகாரமாகைக்குறுப்பாகத் தமிழ் வடிவாய்க் கொண்டு ஆழ்வார்கள் பக்கலிலே திவ்யப்ரபந்தமாகத் திருவவதரித்தது.

4. ஸ்ரீராமாயண பாராயணம் செய்பவர்கள் யாவரும் * வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா * என்கிற ச்லோகத்தை அநுஸந்தித்து வருவது நிர்விவாதம். வேத ப்ரதிபாத்யனான பரம புருஷன் சக்ரவர்த்திதிருமகனாய் அவதரித்தவளவில் அபௌருஷேயமான வேதமும் ஸ்ரீவால்மீகி

பகவானிடத்தில் நின்றும் ஸ்ரீராமாயணமாகத் திருவவதரித்ததென்று இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதை ஒரு ந்யாய சிக்ஷாபாகக் கொண்டு நம்முடைய பூர்வாசார்யர்கள் நிர்வஹித்த கட்டளையை நாம் கீழே விவரித்தோம். ப்ராமாணிகர்கள் இதில் ஸந்தேஹிக்கவோ ஆக்ஷேபிக்கவோ இடமில்லை. பரத்பரனான எம்பெருமானுடைய பரத்வப்பெருமைகளை நாம் தெரிந்து கொள்ளவேண்டுமானால் வேதத்தைக்கொண்டே தெரிந்து கொள்ளவேண்டும். அப்பெருமானுடைய வ்யூஹாவஸ்தையில் விசேஷங்களைத் தெரிந்து கொள்ளவேண்டுமானால் பாஞ்சராத்ரத்தைக் கொண்டே தெரிந்துகொள்ளவேண்டும். விபவாவதார வ்ருத்தாந்தங்களைத் தெரிந்து கொள்ளவேண்டுமானால் இதிஹாஸபுராணங்களைக் கொண்டே தெரிந்துகொள்ளவேண்டும். அந்தர்யாம்யாராதநரூப கர்ம கலாபங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டுமானால் மநுஸ்ம்ருதி முதலிய தர்மசாஸ்த்ரங்களைக்கொண்டே தெரிந்து கொள்ளவேண்டும். அர்ச்சாவதாரப் பெருமைகளைத் தெரிந்துகொள்ளவேண்டுமானால் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளாகிய திவ்ய ப்ரபந்தங்களைக் கொண்டே தெரிந்துகொள்ளவேண்டும். ஆகவே திவ்ய ப்ரபந்தங்கள் அர்ச்சாவதார வேத மென்றே குலாவப்பட்டு வருகின்றன. உண்மையில், ராமகிருஷ்ணாதியவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களான நமக்குத் தஞ்சமான கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திவ்ய தேசங்களின் [நூற்றெட்டுத் திருப்பதிகளின்] அநுபவம் நமக்கு திவ்யப்ரபந்தங்களாலல்லது வேறொன்றினாலும் ஸாத்யமன்றே. ஆழ்வார்களோ திவ்ய ஸூரிகள். அவர்கள் பாடின நூல்களோ திவ்ய ப்ரபந்தங்கள். அப்பிரபந்தங்களுக்கு விஷயமோ திவ்ய தேசங்கள். இப்படி எல்லாம் திவ்யமாக அமைந்த அமைப்பு யாரறிவார்?

5. ஆழ்வார் திவ்யப்ரபந்த மருளிச்செய்யாதிருந்தால் விஷ்ணுவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்கள் அந்தோ! அழகிழந்து கிடக்குமே யென்று கம்பர் சடகோபரந்தாதியில் * அந்த மிலா மறையாயிரத்தாழ்ந்த அரும் பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும் தந்தம் விழாவு மழகு மென்னும் * என்கிற செய்யுளினால் கல்வெட்டாகக் கூறுகின்றார்.

6. வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் இதிஹாஸ புராணங்களை மிகவும் விசேஷமாக இயற்றியிருந்தும் அவர்களை எந்த இடத்திலும் எந்த கோவிலிலும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து ஆராதிப்பது காண்கின்றிலோம். விஷ்ணு கோவில் ஒன்று தப்பாமல் ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து பகவானுடைய வைபவத்திற் காட்டிலும் அவர்களுடைய் வைபவமே ஓங்கும்படி செய்திருப்பதைக் காண்கின்றோம். இப்படி ஆழ்வார்களை ப்ரதிஷ்டை செய்து ஆராதிக்குமிக் காரியம் ஏதோ ஸமீப காலத்தில் ஏற்பட்டதோ வென்று சங்கிக்க இடமில்லாதபடி ஸ்ரீராமாநுஜர் காலத்தில் அவதரித்த நூல்களில் இது பொறிக்கப் பெற்றுள்ளது. ஒன்றே எடுத்துக் காட்டுவோமிங்கு. கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரான பட்டர் உடையவர்காலத்தில் திருவவதரித்து உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தர் என்பது ஜகத்ப்ரஸித்தம். அவர் தாம் அருளிச் செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் நாற்பத்தோராவது ச்லோகத்தில் * வஶாங்கூஶா ஒதீ: பூபசெ வபுஷாம்ஸொ நிஷெஷிவாம்ஸொ உபஸ ஊரு உயொநு--பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந் * என்றுள்ளது. சந்திர புஷ்கரிணியின் கீழ்த்திசையில் ஆழ்வார்கள் பதின்மரும் பிரதிஷ்டை செய்யப்பட்டு எழுந்தருளியிருப்பதாக இதனால் நன்கு விளங்குகின்றது. ஆகவே ஆயிரமாண்டுகட்கு முன்னமே ஸ்ரீரங்கம் கோவிலில் ஆழ்வார்கள் ப்ரதிஷ்டை பெற்றார்களென்பது பேர்க்கவும் போதபடி

யுள்ளது. கீழே நாம் விரிவாக நிரூபணம் செய்தபடி அர்ச்சாவதார வேதமாகிய திவ்ய ப்ரபந்தங்களுக்கே ஏற்றமானது பற்றியே விஷ்ணு வாலயங்களில் ஆழ்வார்களுக்கு இவ்வளவு வைபவம் அமைந்தது.

7. பெரியார்கள் ஆழ்வார்களின் பாடல் பெறாத விஷ்ணு கோவில்களில் பிரவேசிக்கத் தயங்குவது போலவே, ஆழ்வார்களின் விக்ரஹப்ரதிஷ்டையும் திவ்யப்ரபந்தாநுஸந்தானமுமில்லாத கோவில்களில் பிரவேசிக்கவும் தயங்குவர்கள். ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளில் பிரவேசமில்லாதவர்களுக்கு மோக்ஷமே கிடையாதென்பதை ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் பாதுகாஸஹஸ்ரத்தில் கூசாது கூறுகின்றார். ஒரு ச்லோகமே இங்கெடுத்துக் காட்டுகின்றேன்;—“ [illegible] த்ராமிடோபநிஷந்நிவேச ஶூந்யாநபி லக்ஷ்மீரமணாய ரோசயிஷ்யந்” என்பது. இந்த ச்லோகத்தின் தாற்பரிய மென்னவென்றால், ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளில் பிரவேச பாக்யமில்லாதவர்களைத் திருவுள்ளம் பற்றுவதில்லையென்று எம்பெருமான் விரதம் கொண்டிருப்பவனும். இப்படியிருந்துவிட்டால் இவ்வுலகில் பலபல பேர்கள் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பை இழந்தே போகவேண்டிவரும். ஏனென்றால், ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகள் தமிழ்ப்பாஷையில் அவதரித்திருப்பதாலும் அந்தப் பாஷையை அறியாதவர்களே உலகில் அதிகஸங்க்யையாக இருப்பதாலும் அவர்களெல்லாரும் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பைப் பெறுவதற்கு ப்ரஸக்தியில்லையாய் விடுகிறது. உலகில் ஒருவர் தப்பாமல் எல்லாருமே எம்பெருமானுடைய இன்னருளுக்கிலக்காகி உய்வு பெறவேண்டுமென்று விசாலமான திருவுள்ளங்கொண்ட நம்மாழ்வார் ஒரு உபாயம் செய்தாராம். அவர் பகவானுடைய பாதுகையில் ஆவேசித்து சடகோப னென்றும் சடாரியென்றும் தம்முடைய திருநாமத்தையே பாதுகைக்கு ஆக்கி, பெருமாளருகே வருகிற எல்லாருடைய தலையிலும் ஏறி வீற்றிருந்து, இவ்வழியினாலே எல்லாரும் ஒருவாறு ஆழ்வார் ஸம்பந்தம் பெற்றவர்களாகி உஜ்ஜீவிக்கும்படி செய்துவிட்டாராம். இப்படியருளிச் செய்தவர் வேதாந்தவாசிரியர். இதனால், ஏதேனுமொருவிதமாக ஆழ்வாருடைய ஸம்பந்தம் பெற்றவர்களுக்கே ஸத்கதியுண்டென்றும் அது பெறாதவர்களுக்கு ஸத்கதிகிடையாதென்றும் ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்யர்களின் ஸித்தாந்தம் கல்வெட்டாக இருந்ததென்று யாரும் காணலாம். எம்பெருமானுடைய திருவடி நிலைக்கு ஆழ்வார் திருநாமமன்றோவுள்ளது.

8. இப்படி ஆழ்வார்களாலும் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளாலுமே மேன்மை பெற்ற விஷ்ணுவாலயங்களில் தர்ம பரிபாலனம் செய்யுமதிகாரபதவியை ஆளுமவர்கள் முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம் எதுவென்பதை இனி நாம் விவரிக்கவேண்டிய அவசியமுளதோ? ஆழ்வார்களின் திருநக்ஷத்ரபரிபாலனாதிகள் செவ்வனே நடைபெறுகின்றனவா? என்பதையே முக்கியமாக முன்னம் கவனிக்கவேண்டும். அவ்வாழ்வார்களின் ஸ்ரீ ஸூக்திகளை ஓதுமதிகாரம் பெற்ற பெரியார்களைப் புரஸ்கரிக்கவேண்டிய முறைகளில் வழுவொன்றும் நேராதபடி கவனித்துக் கொள்ளவேண்டியதும் மற்றொன்று. இப்போது விஷ்ணுவாலயங்களில் பெரும்பாலும் ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத ஸ்மார்த்தர்களும் மாத்வர்களும் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டி பதவியில் நியமனம் பெறுகிறார்கள். உண்மையில் இவர்கள் விஷ்ணுத்வேஷ மற்றவர்களாயும் விஷ்ணு பக்தியுக்தர்களாயுமிருப்பதால் விஷ்ணுவாலயங்களில் தர்ம பரிபாலக பதவிக்கு உரியவர்களேயாவர். ஆனால் இவர்கள் தங்களுடைய உரிமையை முழுது முணர்ந்து செவ்வனே செலுத்துதல் வேண்டும். ஆழ்வார்களிடத்திலும் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளிடத்திலும் ஸ்ரீ ஸூக்தி வல்லவர்களிடத்திலும் இவர்களுக்கு ஸ்வத: பக்தியிருக்கக்

காரணமில்லை. ஆனாலும் ஆலய தர்ம பரிபாலனஞ் செய்ய சம்பளம்பெற்று வந்துவிட்டபடியால் அந்தந்த ஆலயங்களின் நிபந்தனைகளுக்குப் பணிந்து ஒழுங்கான முறையில் நடக்க வேண்டியது கடமையாகும். ஒரு பெண் ஒருவர்க்கு இரண்டாவது மனைவியாக வாழ்க்கைப்படுகிறாள். இறந்துபோன மூத்தமனைவிக்குச் சில மக்கள் இருந்தால் அந்த ப்ரஜைகளின் போஷணையும் இப்பெண்ணுக்கே கடமையாகிறது. உண்மையில் அந்த ப்ரஜைகளிடத்தில் இப்பெண்ணுக்கு அன்பில்லை அஸம்பாவிதமானாலும் கைப்பிடித்த கணவனது முகமலர்ச்சிக்காக அந்த ப்ரஜைகளிடத்தில் மிக்க அன்பு காட்டிக் கணவனோடொப்ப அக்குழந்தைகளையும் போஷித்து நல்ல புகழ் பெறுகின்றாள். அதே முறைமையை இங்கும் ஆவாஹனம் செய்துகொள்ளவேண்டும்.

9. பிராமாணிகர்களாய் கம்பீரப்ரக்ருதி வாய்ந்தவர்கள் தாம் ஏற்றுக்கொண்ட பதவியைச் சிறிதும் பழிப்புக்கிடமில்லாதபடியே யசஸ்கரமாக நடத்திக்கொண்டுவருகிறார்கள். ஒரு நிதர்சனம் காட்டுகிறோம். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கே அஸாதாரணமான திவ்யப்ரபந்த பாராயணம் முதலிய சிலவிஷயங்களில் வழக்குகள் உண்டாகி நியாயாலயங்களுக்குப் போக நேர்ந்திருக்கிறது; முன்ஸீப் கோர்ட்டு ஜில்லாகோர்ட்டு ஹைகோர்ட்டு பார்லிமெண்டு என்னப்படுகிற எல்லா நீதி மன்றங்களிலுமே ஷெடி வழக்குகள் சென்றிருக்கின்றன. ஒவ்வொரு நீதிமன்றத்திலும் வழக்குகளைப் பரிஷ்காரம் செய்தவர்கள் பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவரல்லாதாரும் பிராமணரல்லாதாருமே. அவர்களெல்லார்க்கும் திவ்யப்ரபந்தங்களில் அப்ரதிபத்தியும் விப்ரதிபத்தியும் பரிபூர்ணமாகவுண்டு. கோவில்களில் திவ்யப்ரபந்த பாராயணங்களை அறவே நீக்கிவிடவேணுமென்கிற அபிப்ராயமுடையாரது வகுப்பில் சேர்ந்தவர்களே அவர்கள் பெரும்பாலும்.

10. ஆயினும், நீதிபதி ஸ்தானத்தை வஹிக்கின்ற நாம் நியாயப்பழுதாக நடந்துகொள்வது கூடாது என்கிற தருமத்திற்குக் கட்டுப்பட்டே அவர்கள் திவ்யப்ரபந்தங்களுக்கு விஷ்ணுவாலயங்களிலுண்டான கௌரவத்தைச் சிறிதும் போக்காமல் அநாதியான வழக்கங்களை உண்மையான ரிகார்டுகளினாலும் பல மூகாந்தரங்களினாலும் தெரிந்துகொண்டு நீதி நன்னெறியையே செலுத்தியுள்ளார்கள். திவ்யப்ரபந்த பாராயண விஷயமாக கோர்ட்டுகளில் வழக்கு உண்டாகப்பெறாத விஷ்ணுவாலயங்கள் மிகச் சிலவேயாகும். உண்டான வழக்குகளைத் தீர்த்தவர்கள் ஸ்மார்த்தர்களும் மாத்வர்களும் ஹூணர்களும் யவனர்களும் கிறிஸ்துவர்களுமே பெரும்பாலுமாவர். அவர்கள், தங்களுடைய சொந்தக் கொள்கைக்கு மதிப்புக்கொடுத்து நீதி நன்னெறியில் விலகி ஜட்ஜ்மெண்டுகள் எழுதியிருந்தார்களாகில் திவ்யப்ரபந்தங்கள் மறைந்தே போயிருக்கும். அவ்வதிகாரிகள் யாவரும் திவ்யப்ரபந்தமே அர்ச்சாவதாரவேதமென்கிற உண்மையை உள்ளபடி உணரப்பெற்று எள்ளளவும் நியாயவிபரீதம் செய்யாமல், தங்களுடைய சொந்தக் கொள்கையை வெகுதூரத்தில் விலக்கி உண்மையான நீதிபதிகளாய் நடந்து கொள்ளவேதான் திவ்யதேசங்களில் திவ்ய ஸூரிகளின் பெருமைகளும் திவ்யப்ரபந்தங்களின் பெருமைகளும் "படிக்குப்பாதி" என்கிறமுறையிலாவது விளங்கிக் கொண்டிருக்கின்றன.

11. அப்படிப்பட்ட ஆலயங்களுக்கு தர்ம நிர்வாஹகர்களாய் நியமிக்கப்பட்டு வந்து வேலை பார்க்கின்ற டிரஸ்டிகளும் அந்த நியாயத்திற்குக் கட்டுப்பட்டு அந்தப் பெருமைகளுக்குச் சிறிதும் குறை ஏற்படாதபடிக்கு தர்ம பரிபாலனஞ் செய்துபோகவேண்டியதே கடமையாகும்.

12. இவ்வளவு விரிவாக நாம் இப்போது இந்த வியாஸம் எழுதுவதற்கு என்ன ப்ரஸக்தியென்று சிலர் விமர்சிக்கக் கூடும். அதையும் நாமே தெரிவிக்கிறோம். திவ்ய தேசங்களுக்கு மிகமுக்கியமான திவ்ய ப்ரபந்த பாராயணம் ஆங்காங்கு மலினமாகி வருகின்றது. உபபத்தி குறைவான தேவஸ்தானங்களில் ஏது எப்படி நடந்தாலும் விசாரமில்லை. நல்ல உபபத்தியுள்ள ஸந்நிதிகளில் விசேஷகாலங்களில் ஆயிரக்கணக்கில் செலவு செய்து நாதஸ்வரக் கச்சேரியென்றும் பாட்டுக்கச்சேரியென்றும் நடத்தி வீண்டம்பங்கள் செய்யப் பார்க்கிற அதிகாரிகள் "விஷ்ணுவாலயங்களுக்கு முக்கியமான சிறப்பு திவ்ய ப்ரபந்த பாராயணமாயிற்றே, அதனையன்றோ நாம் முதன் முதலாகக் கவனிக்கவேண்டும்; அந்த ஸம்ருத்திக்குப் பிறகல்லவோ மற்ற ஸம்ருத்திகளைப் பார்க்கவேண்டும்" என்று சிறிதும் நினையாமல் அதை அடியோடு மறந்து, பாமரலௌகிகர்கள் தலையாட்டுவதற்கு வேண்டிய வழிகளில் வீணாடம்பச் செலவுகளைச் செய்துவருகிறார்களே யென்கிற பரிதாபம் இந்த வியாஸமெழுதத் தூண்டிற்று.

13. அன்றியும், சில திவ்ய தேசங்களில் வந்து சேருகிற டிரஸ்டிகள், கீழே நாம் விரிவாக விவரித்த நீதிகளிலே சிறிதும் மதி செலுத்தாமல், தங்களுடைய இயற்கைக் கொள்கைக்கே மதிப்பு கொடுத்து "திவ்ய ப்ரபந்த மென்பது தமிழ்ப்பாட்டுத்தானே" என்று ஸாமாந்யமாக நினைத்து அதனிடத்திலும் அதையோதுமவர்களிடத்திலும் அநாதரம் காட்டுமது கண்டு அவர்களுக்கு உண்மையான தமிழ்வேதப் பெருமையைக் காட்டவேண்டி நாம் இந்த வியாஸம் எழுதப்புகுந்தது. திவ்ய தேசங்களுக்குக் கீழே விவரித்த பெருமைகள் தவிர மற்றொரு பெருமையும் இங்குத் தெரிவிக்கிறோம். ஆங்காங்கு கோவில்களில் எம்பெருமான்களுக்கு வழங்கிவரும் திருநாமங்கள் பெரும்பாலும் ஆழ்வார்களின் திருவாக்கிலிருந்து அவதரித்தவைகளே அன்று தொடங்கி ஆதரிக்கப்பட்டு வருகின்றன. ஒரு பெருமாளை (திருக்குடந்தையில்) ஆராவமுதே! என்று ஆழ்வார் விளித்தார். இத்தத்திருநாமம் ஆழ்வார் ஸ்ரீஸூக்திதவிர வேறெங்கும் கிடையாது. இதுவே அந்த பகவானுக்கு உகப்பாகி இதை ஸம்ஸ்க்ருதப்படுத்தி அபர்யாப்தாம்ருதமென்கிறார்கள். ஆழ்வார் நாகைப்பட்டணமென்கிற திருநாகைக்கு எழுந்தருளி அவ்வூர்ப்பெருமாளுடைய அழகிலேயீடுபட்டு அச்சோவொருவர் அழகியவா! என்று ஒரு காலைக்கு ஒன்பதின்காற் சொன்னார்; இதைக்கொண்டே அப்பெருமாளுக்கு ஸௌந்தர்யராஜனென்று திருநாமமிட்டனர். ஆழ்வார் திருப்புட்குழியெம்பெருமானைப் பாடுகையில் "புட்குழியெம் போரேற்றை" என்றார்; போரேறு என்கிற தமிழ்த் திருநாமத்தையே வடமொழியில் ஸமரபுங்கவ: என்றாக்கினர். மலையாளத்தில் திருச்சிற்றாறு என்கிற திவ்யதேசத்தில் சென்று பெருமாள் திருநாமம் என்னவென்று போத்திகளைக் கேட்டால் "இமையவரப்பனென்னப்பன்" என்று உங்கள் ஆழ்வார்கள் பாடின திருநாமந்தான் என்கிறார்கள். திருக்கண்ணமங்கையிற் சென்று பெருமாள் திருநாமமென்னவென்று கேட்டால் ப்ருஹத்பஹிஸ்ஸிந்துநாதன் என்கிறார்கள்; பெரும்புறக்கடலை என்று திருமங்கையாழ்வார் திருவாக்கில் வந்ததையே வடமொழிப்படுத்திவிட்டார்கள். இந்த வகையில் தெரிவிக்கவேண்டிய விசேஷங்கள் பலபலவுண்டு. நம் தேவப்பெருமாளுக்கு வழங்கிவரும் பேருளாளனென்னும் திருநாமமும் ஆழ்வார் திருவாக்கில் வந்தது பற்றியே கொள்ளப்பட்டது.

14. ப்ரஸங்காத், காஞ்சீபுரம் ஸ்ரீ தேவராஜ ஸ்வாமி தேவஸ்தானத்தைப் பற்றிச் சிறிது பேசுகிறோம். இந்த தேவஸ்தானத்தில் சில காலம் ஏகதேசமாக தர்ம கர்த்ரு

பதவியை வஹித்து வந்த தாதாசார்ய வம்சஸ்தர்கள் தர்ம பரிபாலனங்களை ஒழுங்கு பாடாகச் செய்வதில்லையென்றும் அவர்களை விலக்கி நியாயம் செலுத்தவேண்டுமென்றும் சுமார் 40 வருஷங்களுக்கு முன் வியவஹாரம் (ஸ்கீம்கேஸ்) ஆரம்பமாயிற்று. அது முப்பது வருஷங்களுக்குமுன் சென்னை ஹைகோர்ட்டாரவர்களால் ஒருவாறு முடிவு செய்யப்பட்டது.

15. தாதாசார்ய வம்சஸ்தர்களில் ஐந்து பேர்கள் தர்மகர்த்தாக்களாயிருக்க வேண்டுமென்றும், ஒவ்வொரு வருஷத்தில் ஒவ்வொருவர் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியாக இருந்து அதிகாரம் செலுத்திவர வேண்டியதென்றும், இவர்கள் அநீதியாக நடந்துகொண்டால் அதைப் பரிசீலனை செய்து நியாயம் செலுத்துவதற்காக இவர்களுக்கு மேல் ஒரு ட்ரஸ்டு போர்டு இருக்கவேண்டியதென்றும், அந்த டிரஸ்டு போர்டில் ஒரு தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர், (தாதாசார்யரல்லாத) ஒரு வடகலை ஸ்ரீ வைஷ்ணவர், ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் ஆக மூவர் அதிகாரிகளாக இருந்து தணிக்கை செய்யவேண்டியதென்றும்; அவசியம் நேருங்காலங்களில் இந்த ஸ்கீமை மாறுதல் (மாடிபிகேஷன்) செய்யலாமென்றும் முடிக்கப்பட்டது. அவ்விதமாகவே சுமார் இருபது வருஷகாலம் நடந்து வந்தது.

16. அதிலும் தரும நிர்வாஹங்கள் மிகவும் சீர்கேடாகவேயிருந்ததனால் மறுபடியும் ஸ்கீம் மாடிபிகேஷன் செய்யப்படவேணுமென்று (தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களால்) வியாஜ்ஜியம் தொடுக்கப்பட்டது. அப்போது ஐந்தாறு வருஷ காலம் ஷை தாதாசார்ய வம்சஸ்த தர்மகர்த்தாக்கள் விலக்கப்பட்டு ஸ்மார்த்த ப்ராஹ்மணரொருவர் ரெஸீவராக ஜில்லா கோர்ட்டாரால் நியமிக்கப்பெற்று தேவஸ்தான பரிபாலனம் நடந்து வந்தது. அந்த வியவஹாரமானது விசேஷபலனைப் பெறுவியாமலே முடிந்திட்டதனால் மறுபடியும் ஷை தாதாசார்ய வம்சஸ்தர்களே ஐந்து பேர்கள் தர்மகர்த்தர்களாக இருந்துவர நேர்ந்தது. வாதிகளான தென்கலையார்களால் சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளப்பட்டிருந்தது. அந்த அப்பீல் 17–1–1941 தேதியில் கனம் ஜட்ஜ் வார்ட்ஸ்வொர்த் துரையவர்களாலும் ப்ரஹ்மஸ்ரீ. கனம் ஜட்ஜ் பதஞ்சலிசாஸ்திரியவர்களாலும் பரிஷ்காரமாக முடிவு செய்யப்பட்டது. இந்த முடிவின் ஸாராம்சங்களை மேலே விளக்கிக் காட்டுகிறோம்.

17. ஷை தாதாசாரியர்களுக்குண்டான இந்த தர்மகர்த்ருத்வஹக்கானது பரம்பரை மிராசா? அன்றா? என்கிற ஒரு வியாஜ்ஜியமும் தனிப்பட நடந்தது. பரம்பரை மிராசு தான் என்று முன்னம் ஜில்லாகோர்ட்டில் முடிந்திருந்தது. அதன் பேரில் தென்கலையார் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ள, பரம்பரை மிராசு அல்ல என்று தீர்மானிக்கப்பட்டுக் கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பு வலிதாக மறுக்கப்பட்டது.

18. கடைசியான முடிவு என்னவென்றால்; ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் (ஸ்மார்த்தர் அல்லது மாத்வர்) ஸர்வாதிகார ஸம்பந்தரான மானேஜிங் டிரஸ்டியாக நூறு ரூபாய் சம்பளத்தில் நியமிக்கப்படவேண்டும். தேவஸ்தான ஸம்பந்தமான லௌகிக வைதிக ஸகல அதிகாரங்களும் அவரொருவர்க்கே அதீனம். தாதாசார்ய வம்சஸ்தர்களில் கீழண்டை வகுப்பிலும் மேலண்டை வகுப்பிலுமாக இரண்டு பேர்கள் ஒருவிதமான (அதிகாரமுமின்றிக்கே நாமமாத்ரமான) (ஆனரரி) டிரஸ்டிகளாக இருக்கவேண்டியது. மானேஜிங் டிரஸ்டியின் நடவடிக்கைகளின் மீது தணிக்கை பார்க்கவேண்டிய அதிகாரம் முழுவதும் ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டைச் சேர்ந்தது. ஷை ஸ்கீம் கேஸ் அப்பீல் வாதிகளான ஸ்ரீ காஞ்சி. P.B. அண்ணங்கராசாரியர் முதலான (எழு) தென்கலையார்களுக்கு

கோர்ட்டு காண்டு சுமார் ரூ. 450 வரையில் தேவஸ்தானத்திலிருந்து செலுத்தவேண்டியது என்பது தீர்ப்பின் ஸாராம்சம்.

19. ஷை தீர்ப்பை கோர்ட்டார் வெளியிட்டவளவில், அப்போது தர்மகர்த்தாக்களாக இருந்து வந்த தாதாசாரியர்கள் "நாளது வைகாசி மாதத்தில் நடைபெற வேண்டிய ப்ரஹ்மோத்ஸவம் வரையில் நாங்களே யிருந்து அநுபவித்துவிட்டு உடனே விலகிப் போய் விடுகிறோம்; கோர்ட்டார் தயவு செய்து அந்தப்படிக்கு உத்தரவு அளிக்கவேணும்" என்று கேட்டுக்கொண்டார்கள். அதைக் கோர்ட்டார் சிறிதும் அநுமதிக்கவில்லை. "நாளது மார்ச்சு மாதம் 17உக்குள் இந்த ஆர்டர் ஆசாரத்திற்கு வரவேண்டியது அவசியம்" என்று முடிவு செய்திட்டார்கள். அப்படியே அன்று முதலாகவே ஆசாரத்திற்கு வந்து விட்டது.

20. பகவத் ஸந்நிதிகளில் தர்மகர்த்தாக்கள் என்கிற பதவி கிடைப்பது ஸாமான்யமல்ல. ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயன் என்னவேணும். அப்படி அலப்ய லாபமான பதவியைப் பெற்றவர்கள் உண்மையில் தர்மகர்த்தாக்களாகவே இருந்து வந்தால் ஒரு பங்கமுமடையாமல் நீடூழி வாழ்வர்களென்பதில் ஐயமில்லை. தர்மகர்த்தாக்களாக நியமிக்கப்பட்டு வந்து சேர்ந்த அன்றைக்கே தர்மஹர்த்தாக்களாகத் துணியுமவர்களைப் பற்றி நாம் தெரிவிக்க வேண்டியது என்ன இருக்கிறது? ஸ்ரீ காஞ்சீ வரதராஜன் தேவஸ்தானமானது பலவகையிலும் ப்ரஸித்தி பெற்றது. இதற்கு நிகரான திவ்ய தேசம் வேறொன்றில்லையென்றே சொல்லலாம், இப்படிப்பட்ட திவ்ய தேசத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஆலயங்களுக்கு உரிய லக்ஷணங்கள் நெடுநாளாக மிகவும் பங்கமடைந்திருந்தன. ஆழ்வார்களுக்குத் திருநக்ஷத்திரங்கள் கொண்டாடுவதும், பகல் பத்து, இராப் பத்து என்கிற அத்யயநோத்ஸவத்தை விபவமாக நடத்துவதும் முதலியவை விஷ்ணுவாலயங்களுக்கு விசேஷ லக்ஷணங்கள் என்பது நாம் சொல்லவேண்டுமோ? ஆழ்வார்கள் இருக்குமிடம் தெரியாமல் மூலையிலொடுக்கிவைத்திட்டு, அவர்களுடைய ஸந்நிதிகளின் வாசல்களில் மண் சுவரெழுப்பி முள்ளடைத்து..............இப்படியாகச் செய்து வைத்திருந்தார்கள் முன்னே யிருந்த டிரஸ்டிகள். கோஷ்டியின் பெருமைகளோ, ஆழ்வாராசார்யோத்ஸவ பரிபாலன வைபவங்களோ எல்லாம் ஒருவருக்குமின்றுடையதாகவே யிருக்கின்றனவென்கிற நிர்வேதத்தினால் தேவாலய லக்ஷணங்களை யெல்லாம் சீர்குலைத்து நடத்தி வந்தார்கள். மணவாளமாமுனிகளில்லாமல் அத்யயநோத்ஸவம் நடத்தக்கூடாதென்கிற நியாயாலயத்தீர்ப்பு இருந்ததனாலே அறுபதெழுபது வருஷ காலம் அத்யயநோத்ஸவத்தையே அடியோடு அடக்கியிருந்தார்கள். இப்படிப்பட்ட சில்விஷமங்கள் பன்னியுரைக்குங்கால் பாரதமாம்.

21. ஆதியில் தாதாசார்யவம்சத்தவர்களுக்கு ஏற்பட்ட பெருமைகளெல்லாம் மணவாள மாமுனிகளிடத்தில் பக்தி ஸம்பத்தினாலேயே என்பது உண்மை. என்றைக்கு இவர்கள் மணவாள மாமுனிகளிடத்தில் பகை கொண்டு நடக்க ஆரம்பித்தார்களோ அன்றைக்கே இவர்களுடைய ஸ்ரீ க்ஷயிக்கத் தொடங்கிற்று. ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் ஸந்நிதியில் இவர்களுக்கு எப்படிப்பட்ட மரியாதைகள் இருந்தன! காஞ்சீ க்ஷேத்திரத்து ஸகல தேவாலயங்களிலும் எப்படிப்பட்ட மரியாதைகள் இருந்தன! அந்தோ! எல்லா மழிந்தன.

22. இவ்வளவுக்கும் யாது காரணமென்பதை ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத (ஸ்மார்த்தர்களான) மத்யஸ்த அதிகாரிகள் உள்ளபடியே கண்டறிந்து சிலாசாஸநம் போல் எழுதி வைத்திருக்கின்றார்கள். ஸ்ரீ பெரும்பூதூர் ஸந்நிதி விஷயமாக ஹை கோர்ட்டார் அவதரிப்பித்த ஜட்ஜ்மெண்டில் சிறந்த ஆராய்ச்சியுடன் அழுத்தமாக எழுதிவைத்திருக்கிற வாசகம் அச்சாகி

வெளி வந்துள்ளது. மேலே 21வது பாராவில் நாம் எழுதியுள்ளது தான் அதில் லாபமாக வும் வியக்தமாகவுமுள்ளது.

23. தேவப்பெருமாள் ஸன்னிதியை ஆண்டுவந்த பழைய டிரஸ்டிகள் ஷ ஸன்னிதியில் மணவாள மாமுனிகளுக்கும் மற்றுமுள்ள ஆழ்வாராசாரியர்களுக்கும் இழைத்த தீங்குகள் உண்மையாகவே ராமாயணமும் பாரதமும் போன்றது. அவை பல புத்தகங்கள் மூலமாக வெளிவந்துமிருக்கின்றன. கோர்ட்டு ரிகார்டுகளிலும் ஏறிக்கிடக்கின்றன. அப்படிப்பட்ட தீங்குகள் அற்றொழியவேணுமென்றே இந்த தேவஸ்தானத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத பிராமணர்கள் அதிகாரம் செலுத்தும் டிரஸ்டியாக நியமிக்கப்பட்டார்கள். 17—3—41 தேதி முதலாக மேலேகுறித்த பிராமணர்களின் அதிகாரத்திலேயே இந்த தேவஸ்தான நிர்வாஹம் நடைபெற்று வருகின்றது. ஆழ்வாராசார்யர்களின் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனங்களும் அத்யயநோத்ஸவமும் மணவாளமாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவமும் இந்த தேவஸ்தானத்தில் பல வருஷங்களாகவே நிறுத்தப்பட்டு அதவே ஒரு மாமூலாக வந்திருந்தபடியால் மத்யஸ்தர்களான புது ட்ரஸ்டிகள் நியமிக்கப்பட்டுங்கூட அநாதிமாமூல்படி உத்ஸவாதிகளை நடத்த ஸௌகரியமில்லாமல்போகவே அவைகளுக்காகத் தனிவியாஜ்ஜியங்கள் நடத்தி அநாதி மாமூல்கள் அநேகமாகப் புதுப்பிக்கப்பட்டன. அவை ஆறுவருஷ காலமாகவே ஒழுங்காக நடந்து வருகின்றன. அவை நடக்க ஆரம்பித்தபிறகு தான் இந்த தேவஸ்தானத்தை விஷ்ணுவாலயமென்று சிறப்பித்துச் சொல்ல அவகாசமுண்டாயிற்று. ப்ரஹ்மஸ்ரீ S. நரஸிம்ஹய்யரவர்களென்பவர் இவ்வாலயத்தில் சில வருஷங்கள் எக்ஸிகியூடிவ் டிரஸ்டியாயிருந்து நல்ல புகழ் பெற்றார். ஆத்மஸ்துதி பரநிந்தை முதலான தீயகுணங்கள் அவரிடம் இடம்பெறுமலிருந்தன. ஸகல பக்தர்களும் அவரையே அடிக்கடி நினைக்கிறார்கள். நிற்க. இதுவரையில் நான்கு டிரஸ்டிகள் வேலைபார்த்து விலகினார்கள். இப்போது ஐந்தாறு மாதகாலமாக சேலத்திலிருந்து ப்ரஹ்மஸ்ரீ R. மாதவராவ் அவர்கள் வந்து சேர்ந்து வேலை பார்த்து வருகிறார்களென்பது முன்னமே தெரிவிக்கப்பட்டிருக்கின்றது.

24. இப்பெரியார்க்கு திவ்யப்ரபந்தங்களிடத்திலும் அவைவல்லாரிடத்திலும் அபசாரபுத்தி ஏற்பட்டிருக்கிறதென்பதை நாம் ஸ்பஷ்டமாகத் தெரிந்து கொள்ள நேர்ந்தது. இவ்வபசாரபுத்தி இவருடைய மதத்திற்கு ஏற்குமாகிலும் இவர் வஹிக்கும் அதிகார பதவிக்குச் சிறிதும் ஏற்காது. பொதுவாக விஷ்ணுகோவில்களுக்கெல்லாம் திவ்யப்ரபந்தமே உயிர்நிலையாயிருந்தாலும், இந்த தேவராஜ ஸ்வாமி தேவஸ்தானத்திற்கு விசேஷித்து அதுவே உயிர் நிலையானதென்பதை இவர் பெரியார்கள்வாய்க் கேட்டுணரவேணும். இந்த ஸ்தல விஷயமாகப் பிரபந்தம்பாடின வேதாந்த தேசிகர் அதன் முடிவில் “தொண்டைமண்டல வேதியர் வாழவே தூயதென்மறைவல்லவர்வாழவே” என்று, தமிழ்மறை வல்லவர் யாவரோ அவர்களே தொண்டைமண்டலவேதியரென்று நிரூபித்துவாழ்த்தியுள்ளார்.

25. இந்த தேவஸ்தானத்தில் அநாதியாக நடைபெற்றுவரும் காரியங்களெல்லாம் திவ்யப்ரபந்த கோஷ்டிக்கு ஆதிக்யம் கொடுத்தே நடந்து வருகின்றன வென்பதையும் சிறிது மூதலிக்கிறோம். வைகாசி மாதத்தில் நடைபெறும் வஸந்தோத்ஸவம் ஏழு நாட்களிலும் தேவஸ்தான இட்டமாக ஸுண்டலும் சந்தனமும் விநியோகம் செய்வது வழக்கம். பெருமாள் ஸன்னிதி வீதியெழுந்தருளித் திரும்புகையில் திருவடி ஸன்னிதி வாசலில் திவ்யப்ரபந்த கோஷ்டி தொடங்கும் போதுதான் அவை விநியோகஞ் செய்வது நாளைக்கும் வழக்கம். இதை நாம் எடுத்துக் காட்டினோமென்று இனி மேல் இந்த வழக்கத்தை மாறு

படுத்த நியமித்தாரும் இதுவே அநாதி வழக்கமென்பதை இன்னுமொரு நூற்றுண்டு வரை பிரவது உலகமுணர்ந்தேயிற்கும். பஞ்சபர்வோத்ஸவங்களில் திருவடி ஸன்னிதி வாசலில் இயல் தொடக்கத்திற்கு அங்கமாகவே சுருளமுது நிவேதனம் ஏற்பட்டிருக்கிறது. ஆண்டாளுடைய மார்கழி நீராட்ட மஹோத்ஸவம் பத்து நாளிலும் இயல் தொடக்கத்திற்கு மரியாதையாகவே ஆண்டாளுடைய திருமுடி மூடலாடையைக் களைவதென்னும் வழக்கமேற்பட்டுள்ளது. அதாவது, மாடவீதிகளெழுந்தருளுகையில் முட்டாக்கிட்டிருந்து, இயல் தொடங்கும்போது அதைக் களைந்திட்டு அநுக்ரஹிப்பது.

26. வையங்கண்ட வைகாசித் திருநாளில் கண்டருளும் வாஹனங்களுங்கூட திவ்ய ப்ரபந்த ஸேவைக்கு அநுகுணமாகவே ஆதிகாலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டது. அதையும் சிறிது விவரிப்போம். முதல் நாள் காலை வாஹனஸேவை ஒன்றுமில்லை. திருப்பல்லாண்டு தொடக்கம் கேட்டருள்வதற்காக வாஹநாரோஹணத்தைத் தவிர்த்து ஸேவை ஸாதிக்கிறக்ரமம். மாலை சிங்கவாஹனம்; அப்போது பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஸேவை; அதில் * என்தொண்டைவாய்ச் சிங்கம் வா * என்று எம்பெருமானைச் சிங்கமாக வரும்படியழைத்த பாசுரம் வருவதால் அதை நோக்கிச் சிங்கவாஹனஸேவை.

27. இரண்டாந்திருநாள் காலை * ஞானச் சுடர் விளக்கேற்றினேன் * என்று ஞான நூலைக் கொடுப்பதாகத் தொடங்கி * மறையாங்கென வுரைத்த மாலை * என்று எம்பெருமானும் ஜ்ஞான ப்ரதானம் பண்ணினதைச் சொல்லுகிற இரண்டாந்திருவந்தாதி ஸேவையாகையாலே, அன்னமாய் நூல் பயந்த அருளாளனுக்கு அன்னவாஹனஸேவை அமைக்கப்பட்டது. அன்றியும், முதல் நாளிரவு பெரியாழ்வார் திருமொழி ஸேவை முடிவுபாகத்தில் * பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க, அன்று அன்னமதானானே * என்று வருதலால் அதைக் கொண்டும் உடனே ஹம்ஸவாஹன ஸேவை மிகவும் பொருத்தமாயிற்று. அன்று மாலை பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்து ஸேவையில் * அரவணையாயாயரேறே அம்மமுண்ணத் துயிலெழாயே—இன்னு முச்சி கொண்டதாலோ * என்று ஸூர்யோதய ப்ரஸ்தாவம் பண்ணிக் கண்ணனை யெழுப்புகிற பாசுரம் வருகையாலே ஸூர்யப்ரபை வாஹனம் அமைந்தது.

28. மூன்றாந்திருநாள் காலை மூன்றாந்திருவந்தாதி ஸேவையில் * பொலிந்த கருடன் மேல்கொண்ட கரியான் கழலே * என்று வருதலால் கருடவாஹனஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து ஸேவையில் * அடங்கச் சென்றிலங்கையை யீடழித்த அனுமன் புகழ்பாடி * என்றும் * சீருந் திறலனுமன் தெரிந்துரைத்தவடையாளம் * என்றும் சிறிய திருவடி ப்ரசம்ஸை வருதலால் சிறியதிருவடி வாஹன ஸேவை அமைந்தது.

29. நான்காந்திருநாள் காலை நான்முகன்திருவந்தாதி ஸேவையில் * ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவணையான் * என்றும் * விரித்துரைத்தவெந் நாகத்துன்னை * என்றும் ஆதிசேஷனுடைய ப்ரஸ்தாவம் வருதலாலும் * வைகுந்தச் செல்வனார் சேவடிமேல் பாட்டு * என்று வைகுண்டநாதன் திருவடிகளில் அவ்வாழ்வார் பாசுரம் பாடினதாகச் சொல்லுகையாலும் சேஷவாஹனத்தில் பரமபதநாதன் திருக்கோலஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி நான்காம்பத்து ஸேவையில் * களிர்மாமதியைச் செஞ்சுடர்நாவளைக்கும் * என்று சந்திரனுடைய ப்ரஸ்தாவம் பண்ணியிருக்கையாலே சந்த்ரப்ரபைவாஹந ஸேவை ஆயிற்று.

Released by Maran's Dog ,Toronto, Canada



30. ஐந்தாந்திருநாள் காலை திருவிருத்தம் ஸேவை. ஆழ்வார் தாமான தன்மையை விட்டு நாச்சியார் திருக்கோலம் பூண்டு அருளிச்செய்த திவ்யப்ரபந்தமதுவாகையாலே அதற்குச் சேர நாச்சியார் திருக்கோலம் பூண்டு பெருமாள் ஸேவை ஸாதிக்கிறபடி. திருவிருத்தம் என்பதற்கு, திரு—நாச்சியாருடைய, விருத்தம்—வ்ருத்தாந்தம் என்று பொருள். நாச்சியார் திருக்கோலம் பூண்ட ஆழ்வாருடைய செய்திகளைச் சொல்லும் ப்ரபந்தமென்றபடி. இதற்கு மிகவும் பொருத்தமாகவே அன்று நாச்சியார் திருக்கோலம் அமைந்தது. வேறு காரணமில்லை. அன்றிரவு யாளிவாஹனஸேவை ஏற்பாடு செய்திருக்கிறவர்களின் அபிப்ராயத்தை ஆழ்ந்து பார்க்கையில் வெகு ஆச்சரியமுண்டாகிறது. திவ்யப்ரபந்தங்களில் ஆளியைப்பற்றின பேச்சுக்கள் சிலவிடங்களில வருகின்றன. எங்கு வருகின்றன வென்று பார்த்தால் பெரிய மலைகளை வருணிக்குமிடங்களிலதான் வருகின்றன. அஹோபிலம் திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை பதரிகாச்ரமம் என்னுமித்தலங்களை வருணிக்கும்போதுதான் யாளிகளைப்பற்றிப் பேசுவது வழக்கம்; * கன்மணி வண்ணனூர் ஆளியுங் கோளரியும் * செங்கணாளி யிட்டிறைஞ்சும் * இத்யாதி பாசுரங்கள் காண்க. ஐந்தாந்திருநாளிரவு திவ்யப்ரபந்த ஸேவையில் பதரிகாச்ரம மார்க்கத்திலுள்ள தேவப்ரயாகையென்கிற கண்டமென்னுங் கடிநகர்ப் பாசுரங்களும், * துக்கச் சுழலையைச் சூழ்ந்துகிடந்த * என்று தொடங்கித் திருமாலிருஞ் சோலைப் பாசுரங்களும் * சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையான் பாசுரங்களும் ஸேவிக்கப்படுவதால் அந்த திவ்யதேசங்களுக்கும் யாளிக்குமே ஸம்பந்தமுள்ளதென்று கொண்டு யாளிவாஹனஸேவையை அப்போது ஏற்படுத்தினார்கள். இவ்வளவு ஆழ்ந்து ஏற்பாடு செய்தவர்களின் புத்தி சாதுரியம் மிகவும் மெச்சத்தக்கதாகவுள்ளது.

Released by Maran's Dog ,Toronto, Canada

31. ஆறாந்திருநாள் காலை திருச்சந்தவிருத்தம் ஸேவை. அதில் * ஒன்றிரண்டு தீயுமாகி ஆயனாயமாயனே * என்றும் * ஆயனாகி ஆயர்மங்கைவேயதோள்விரும்பினாய் * என்றும் * ஆனைகாத்தோரானைகொன்று அதன்றியாயர்பிள்ளையாய் ஆனைமேய்த்தி ஆனெயுண்டி * என்றும் * ஆதியாகி ஆயனாய மாயமென்ன மாயமே * என்றும் கொள்ளை கொள்ளையாக கோபாலக்ருஷ்ண ப்ரசக்தி வருதலால் அதற்குச் சேர கோபாலக்ருஷ்ணன் திருக்கோலம் பூண்டு ஸேவை ஸாதிக்கிறபடி, அன்றிரவு யானைவாஹனஸேவை. அது நாச்சியார் திருமொழிஸேவைக்கு மிகவும் பொருத்தமாக அமைந்தது. நாச்சியார் திருமொழியில் * மங்கலவீதி வலஞ்செய்து—அங்கு ஆனைமேல் * என்கிற பாசுரம் ஸேவிக்கப்படுவதற்குப் பொருத்தமாகவே இது அமைந்தது. இதில் மற்றொரு விசேஷமும் கவனிக்கவேண்டும்; அதாவது—ஆனைவாஹனப் பாசுரமாக மேலேயெடுத்துக்காட்டின பாட்டில் * குங்குமமப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து * என்று சூர்ணாபிஷேகம் சொல்லியிருக்கையாலே இதுவும் அன்று காலை வைதிகச் சடங்காக நடத்தப்பட்டுவருகிறது.

Released by Maran's Dog ,Toronto, Canada

32. ஏழாந்திருநாள் திருத்தேர். திருமங்கையாழ்வார் திருத்தேர்ப் ப்ரபந்தமாகத் திருவெழுகூற்றிருக்கை ஸாதித்தது உலகமறியும். அது ரதபந்தத்தில் அமைந்தது. அந்த திவ்யப்ரபந்த ஸேவைக்குச் சார்பாக ரதோத்ஸவம் வெகு பொருத்தமாக அமைந்தது. திருத்தேர் நிலை சேர்ந்தபின்பு பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளுகையில் திருமடல் முடிந்தபின் நாச்சியார் திருமொழியில் சேஷம் ஸேவிப்பது வழக்கம். * கருப்பூரம் நாறுமோ * என்கிற ஒரு பதிகம் ஸேவித்து முடிப்பர்கள். அதில் * செங்கண்மால் தன்னுடைய வாய்த் தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய் * என்கிற பாசுரம் வருவதை நோக்கி அன்று பகலில் திருப்பாய்ந்தாடித் திருமஞ்சனமென்று நடத்தப்பட்டு வருகிறது.

33 அன்றிரவு பெரியதிருமொழி திவ்யப்ரபந்தத் தொடக்கம். அவருடைய சரிதையி லுள்ள வேடுபறிகதைக்கு அநுகுணமாகவே பாதிவழியில் திருமங்கையாழ்வாரை யெழுந் தருளப்பண்ணி அவர்க்கு மரியாதைச்சிறப்புகள் நடத்தி திவ்யப்ரபந்தத் தொடக்கம் செய் வது நாளைக்கும் வழக்கத்திலுள்ளது. * ஆடல்மாவலவன் கலிகன்றிக்காகவே பெருமா ளும் ஆடல்மா வென்னும் குதிரைவாஹனம் கண்டருள்வது.

34. திவ்யப்ரபந்தங்களில் ஆழ்வார்களுடைய அநுபவப்ரகாரங்களில், நாச்சிமார்கள் எம்பெருமானை வெறுத்துத் தள்ளுதல் [மட்டையடி] என்பது ஒரு விலக்ஷணநுபவம். நம் மாழ்வார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரும் இதுவிஷயமாக மூன்று பதிகங்கள் பாடியுள்ளார்கள். இவ்வநுபவம் ஒன்பதாநாள் காலையில் ஒரு நாடகமாக அபிநயம் செய்யப்பட்டு வருகிறது. பெருமாள் தனியே யெழுந்தருளிப் பட்டிமேய்ந்து வருவதும், நாச்சிமார்கள் இவரை உள்ளே புகவொட்டாமல் தடுப்பதுமாக நடந்துவருவது ஆழ்வாரநுபவமேயாகும்.

35. மறுநாள் திருவாய்மொழி ஆயிரத்தையும் கேட்டருள்வதற்காகப் பன்னிரண்டு திருவாராதனங்கள் கண்டருளி இரவு இராமானுச நூற்றந்தாதிக்காக சிசிரோபசாரப் புறப் பாடு கண்டருளி உத்ஸவஸமாப்தியாகிறது. ஆக இப்படிகளை ஊன்றிநோக்குமளவில் திவ்யப்ரபந்த ஸேவையை யநுஸரித்தே வாஹனப் புறப்பாடுகளில் நியதி ஏற்பட்டிருக்கின்ற தென்பது கல்வெட்டாகத்தேறும்.

36. இப்படி நாம் நிரூபணம் செய்வதைக் காண்கின்ற பிறர் ஸஹஸா ஒரு வார்த்தை சொல்லி விடக்கூடும்; பெருமாள் வாஹனஸேவைகள் கொண்டருளுகிறபடிக்குத் தகுதி யாக இவர்கள் திவ்யப்ரபந்த ஸேவைகளை அமைத்துக் கொண்டார்களே யல்லது, திவ்யப்ர பந்த ஸேவைகளுக்குத் தகுதியாக வாஹநஸேவை ஏற்படுத்தப்படவில்லை—என்று.

37. இது பொருத்தமான வார்த்தையாகாது; திவ்யப்ரபந்த ஸேவை இஷ்டமான்படி பொறுக்கிப்பொறுக்கி யெடுத்து அமைத்திருக்கவில்லை; காலைவேளைகளில் இயற்பாஸேவை வரிசையாகவும், மாலை வேளைகளில் பெரியாழ்வார்திருமொழிஸேவை வரிசையாகவும் நடந்து வருவதால், வாஹனஸேவைகளுக்குத்தக்கபடி பாசுரஸேவையை அமைத்துக்கொண்டதாகச் சொல்வதற்கு அவகாசமேயில்லை. இதர திவ்யதேசங்களில் வாஹனக்ரமங்கள் வேறு வேறுவிதமாக இருப்பினும், தேவப்பெருமாள் ஆழ்வார்ஸ்ரீஸூக்திக்கென்றே இட்டுப் பிறந்தவராதலாலும், அந்த ஸ்ரீ ஸூக்தியில் வியாமோஹம் காரணமாகவே உடையவரையும் இழந்தவராதலாலும் இத்தேவப்பெருமாள்ஸன்னிதி ஸம்பந்தப்பட்டவரையில் நாமிங்கு நிரூபித்த திவ்யப்ரபந்தப் பொருத்தங்களும் ஏற்றங்களும் அசைக்கமுடியாதவை.

38. தினப்படியாக நாலாயிரக்ரமமான ஸேவை யென்பது பூலோகத்திற்குள் தேவப் பெருமாள் ஸன்னிதியொன்று தவிர மற்றெவ்விடத்திலும் கிடையாது. தேவப்பெருமாளுக் குண்டான திவ்ய ப்ரபந்த வ்யாமோஹத்திற்கு விஜயத்வஜமன்றோ இது. இங்ஙனே நாம் நிரூபிக்கவேண்டியவை பலபலவுள. இங்கே சுருங்கச் சொன்னபடி.

39. இந்த தேவஸ்தானத்தில் தர்ம நிர்வாஹத்திற்கு வரும் மஹான்கள் தங்களுடைய ஜன்மஸித்தமான வெறுப்பு விருப்புகளை வெகு தூரத்தில்தள்ளி, இவ்விஷயங்களை யெல்லாம் நன்கு விமர்சித்தும், நெடுங்காலம் தவறாக நடத்திவந்தவர்களை விலக்கி நியாயப்படி நடத்து வதற்கன்றோ நாம் நியமிக்கப்பட்டிருக்கிறோமென்பதை ஒவ்வொருநாளும் ஸுப்ரபாதத்தில் ஹ்ருதய பூர்வகமாக நினைத்தும் ருஜுவான வழியில் நடந்துகொள்வதே நலம்.

40. ஒரு சிறு விஷயத்தோடு இந்த வியாஸத்தை முடிக்கிறோம். தேவப்பெருமாள் ஸந்நிதியில் வருஷந்தோறும் மூன்று திருக்கலியாணங்களுண்டு. (1) மார்கழி முடிவில் போகிபண்டிகை ஆண்டாள் திருக்கலியாணம். (2) பங்குனியுத்தரம் மலையாள நாச்சியார் திருக்கலியாணம். (3) திருவாடிப்பூரம் ஆண்டாள் திருக்கலியாணம். ஆக இம் மூன்று திருக்கலியாணங்களிலும், தேவஸ்தானத்தில் மரியாதைச் சிறப்புள்ள தீர்த்தகாரர்கள் யாவரும் வேதமோதிப் பெருமாளுக்கு ஸமர்ப்பணை செய்வது அநாதிகால வழக்கம். முதலில் * ச்வசுர மமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத் * என்று போற்றப்பட்ட பெரியாழ்வாருடைய ஸமர்ப்பணை; பிறகு தாததேசிக வம்சஸ்தர்கள் தாங்கள் ஸமர்ப்பணை செய்ய ஆரம்பித்து அடைவே ஸகல தீர்த்தகாரர்களும் ஸமர்ப்பணைசெய்து மல்ஜி மரியாதைக்காக ஸ்ரீமத்பரமஹம்ஸ ஆத்தான்ஜீயருடைய ஸமர்ப்பணை வரையில் செய்வது வழக்கம், அதன் பிறகு தர்மகர்த்தாவின் ஸமர்ப்பணையும் செய்வதுண்டு. வர்த்தமான எக்ஸிக்யூடிவ் டிரஸ்டி வந்தபின் இரண்டு திருக்கல்யாணங்கள் நடந்தன. ஸமீபத்தில் நடந்த பங்குனியுத்தரத் திருக்கல்யாணத்தன்று ஸ்ரீ ஆத்தான் ஜீயருடைய ஸமர்ப்பணைக்கு முன்னாடியே தன்னுடைய ஸமர்ப்பணையென்று செய்து அதிலும் சில கல்பனையான தம் பிருதுகளைச் சொல்லிக்கொண்டதாக பக்தவர்க்கங்களின் முறையீடு வலிதாகவுள்ளது. இல்லாத சிறப்புகளைப் புதிதாகத் தாம் ஸம்பாதிக்க ஆசைப்படுகிறவர்கள் அநாதிகாலமாகப் பிறர் ஸம்பாதித்துப் பலபரிச்ரமங்களும் பட்டுப் பாதுகாத்து வருகின்ற சிறப்புகளைப் புரஸ்கரிக்க மனங்கொள்ள வேண்டியது மிக முக்யம்—என்று சொல்லி இவ்வளவோடு நிற்போமிப்போது.

## ஹைதராபாத் நகரத்தில் ஸ்ரீராமக்ரதுவின் விசேஷங்கள்.

சென்ற மாதப் பத்திரிகையில் வெளியிட்டிருந்தபடி டக்கன் ஹைதராபாத் மஹாநகரத்தில் 19-3-50 தேதி முதலாகப் பத்துநாள் விசேஷவைபவமாக ஸ்ரீராமக்ரது நடைபெற்றது. காஞ்சீபுரம் ஸ்ரீ பெரும்பூதூர் திருப்பதி திருக்குடந்தை வானமாமலை முதலான தக்ஷிண திவ்யதேசங்களிலிருந்து வித்வான்களும் வேத வேதாங்கப்ரவீணர்களும் அறுபது திருநாமங்களுக்குமேல் எழுந்தருளியிருந்தார்கள். ஸ்ரீமத் பரமஹம்ஸ. பரகாலமடாதிபதி ஸ்வாமிகளும் ஸ்ரீமதஹோபில மடாதிபதி ஸ்வாமிகளும் நியமித்துச் சில திருநாமங்கள் எழுந்தருளியிருந்தார்கள்.

அவரவர்களுடைய ஸௌகரியப்படி போஜன வஸதிகள் வெகு ஸௌக்கியமாகப் பலவிடங்களில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. தெலுங்கு தேசத்து ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றும் பலநாட்டு ப்ராஹ்மண பண்டிதர்களும் ஆஹூதர்களாயும் அநாஹூதர்களாயும் விசேஷமாக வந்திருந்தார்கள். நூற்றெட்டு ஸ்வாமிகளைக் கொண்டு 108 ஸ்ரீராமாயண பாராயணம் சிறப்பாக நடத்திவைக்கப்பட்டது. உபயவேதபாராயணங்களும் உரிய முறையில் நடந்தன. ஸ்ரீ விஷ்ணுபுராண ஸ்ரீ பாகவத ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி பாராயணங்களும் ஸ்ரீமதஷ்டாக்ஷரஜபாதிகளும் ஹோமங்களும் செவ்வனே நடைபெற்றன.

தினப்படியாக மாலை வேளைகளில் ஹிந்தியிலும் தெலுங்கிலும் உபந்யாஸ கோஷ்டிகள் நடைபெற்றன. பகலில் 1-மணி முதல் 3-மணி வரைக்கும் நடந்துவந்த வித்வத்ஸபையில் ஏறக்குறைய முப்பது வித்வான்களின் ஸம்ஸ்க்ருத பாஷணங்கள் நடந்தன. முடிவில் யாவர்க்கும் பரமத்ருப்திகரமாக ஸத்காரங்கள் செய்யப்பட்டன. ஸேட்டுகளில் ராஜாபஹதூர் பன்னாலால் ஸேட் என்பவரும் ராமப்ரதாப கனையாலால்பித்தி என்பவரும் பொறுப்பாகக் காரியங்களை நிர்வஹித்தார்கள். அவ்வூரில் ப்ரமுகராக எழுந்தருளியிருக்கின்ற ப்ரபல அட்வொகேட் ஆராவமுதய்யங்காரவர்கள், இன்ஷியூரன்ஸ் கம்பெனித் தலைவர் மு. ஸௌந்தரராஜய்யங்காரவர்கள், அட்வொகேட் ராமஸ்வாமி ஐயங்காரவர்கள் முதலான மஹான்களின் ஒத்தாசைப்பினால் இந்த ஸ்ரீராமக்ரது மிகவும் சிறப்பாகவே நடைபெற்றதென்று யாவரும் ஸமகண்டமாகச் சொல்லிக் கொண்டபடி.

# காஞ்சீபுரியில் மதராஸ் கவர்னர் விஜயம்.

மேன்மை தங்கிய சென்னை கவர்னர் பவ்நகர் மஹாராஜா அவர்கள் 7—4—50 வெள்ளிக்கிழமை காலை 10-மணிக்குமேல் சின்ன காஞ்சீபுரம் ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தானம் தரிசனம் செய்ய விஜயம் செய்திருந்தார்கள். முன்னுடியே ஸகல வித மான ஏற்பாடுகளும் ஒழுங்காகச் செய்யப்பட்டிருந்தன. கனம். செங்கற்பட்டு ஜில்லா கலெக்டரவர்கள் [ஸ்ரீமான் ராஜகோபாலையங்காரவர்கள்] போலீஸ் அதிகாரிகளுடன் அன்று காலையில் தேவஸ்தானத்திற்கு விஜயம் செய்து நடத்தவேண்டிய ஒழுங்குகளை தேவஸ்தான டிரஸ்டிகளுக்கும் - மற்றுமுள்ள மிராசுதாரர்களுக்கும் திட்டஞ் செய்திருந் தார்கள். அப்படியே எல்லாம் முறைமுறை நடைபெற்றன.

கவர்னரவர்கள் 10 20 a. m. கோபுரவாசலுக்கு விஜயம் செய்தார்கள். அங்கு முன்னுடி வந்திருந்த சென்னை எண்டோமெண்ட் போர்டு கமிஷனர் ஸ்ரீமான் கஜபதி நாயகர் அவர்கள் கவர்னரவர்களுக்கு மாலையிட்டு வரவேற்று ஷ தேவஸ்தான அத்யா பக மிராசுதாரரும் தீர்த்த மிராசுதாரருமான ஸ்ரீமான் மஹா வித்வான் P. B. அண்ணங் கராசாரியர்ஸ்வாமிகளை கவர்னரவர்களுக்கு அறிமுகப்படுத்தி ஸ்ரீஸ்வாமிகள் ஸம்ஸ் க்ருத பாஷையில் இயற்றியிருந்த வரவேற்புச்லோகமாலிகையை வாசிக்கும்படி சொல்ல, ஸ்வாமிகள் அங்குக் கூடியிருந்த ஸகலரும் களிக்க இன்னிசையுடன் வாசித்து கவர்னரவர் களின் கைத்தலத்தில் கொடுத்தார்கள். அவர்களும் வந்தனுேபசார மொழியுடன் பெற்றுக் கொண்டார்கள். பிறகு தேவஸ்தானட்ரஸ்டிகள் வேதகோஷத்துடன் பூர்ண கும்பமளித்து மாலையிட்டு வரவேற்றார்கள். பிறகுராஜமரியாதைகளுடன் ஆலயத்தி னுட் சென்று பெருமாளையும் தாயாரையும் சேவித்துத் தகுந்த மரியாதைகளைப் பெற்று ஆனந்தமாகத் திரும்புகையில் நூற்றுக்கால் மண்டபத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்து பெருமாளுடைய விலையுயர்ந்த திவ்யாபரண பீதாம்பரங்களைக் கண்ணுேக்கிக் களித்தும், டிரஸ்டிகள் ஆங்கிலத்தில் வாசித்துக் கொடுத்த வரவேற்புப் பத்திரத்தைப் பெற்றுக் கொண்டும் 11-மணிக்குப் பெரிய காஞ்சீபுரம் நோக்கி விஜயம் செய்தார்கள்.

ஸ்ரீ அண்ணங்கராசாரியஸ்வாமிகள் வாசித்த

## வரவேற்பு ச்லோக மாலிகை—பொழிப்புரையுடன்.

श्रीमन् भो विजयीभव प्रचुरसद्विख्यातिभूष प्रभो !
श्रीमत्कृष्णकुमारसिंहसुमहासंज्ञाञ्चित श्रीनिधे ।
विद्यावारिनिधे ! प्रभावमहित ! प्रेमाम्बुधे ! जृम्भताम्
ऐश्वर्यं च यशश्च ते वरदराड्दिव्यानुकम्पाबलात् ॥१॥

மிக்கபெரும் புகழணிந்த திருவுடை மன்னர் பெருமானே! ஸ்ரீக்ருஷ்ண குமார ஸிம்ஹஜீ என்னும் சிறந்த பெயர் வாய்ந்த செல்வனே! கல்விக்கடலே! மேன்மை தங் கிய மன்னவ! அன்புக் கடலே! தேவப் பெருமாளுடைய திருவருள் மிகுதியினால் உமக் குச் செல்வமும் புகழும் மல்குக! ... ... (1)

मद्रासमण्डलमण्डनायितमहामान्याग्रगण्यप्रभो !
श्रीमन् भव्यमहानगर्यधिपते प्राचीनविद्यानिधे ।
काञ्चीमद्य महाप्रमोदभरितां कर्तुं गजाद्रीश्वर-
श्रीपादाब्जसिसेविषामपदिशन्नत्रागत ! स्वागतम् ॥२॥

சென்னை மாகாணத்திற்கு அலங்காரமாக அமைந்த மஹாப்ரபுக்களுக்குள் முன் னணியில் நிற்கும் கோமானே! பவ்மஹா நகரத்திற்கு அரசனே! மேனாட்டுக்கல்விகளுக்குக்

களஞ்சியமே! இன்று ஸ்ரீதேவராஜ ஸ்வாமியைத் திருவடி தொழ வேணுமென்கிற வியாஜங்கொண்டு இக்காஞ்சிமா நகரிலுள்ளாரைக் களிப்புறச் செய்வதற்காகவே இங்கு விஜயம் செய்திருக்கும் பெருமானே! வருக வருக. ... ... (2)

प्रजाकुशलकांक्षिणे प्रबलसत्पदस्थायिने
प्रकृष्टगुणशालिने प्रचुरकीर्तिविद्योतिने ।
महाविभवभागिने भवपुराधिराजाय ते
वयं विनयपेशलं विरचयामहे स्वागतम् ॥३॥

குடி மக்களின் நன்மையைக் கோருகின்றவரும் மிகச் சிறந்த பதவியை அலங்கரித்திருப்பவரும் நற்குணங்கள் நிரம்பியிருப்பவரும் உலகம் நிறைந்த புகழாளரும் மிகுந்த செல்வம் மல்கியவரும் பவ்நகர்த் தலைவருமாகிய உமக்கு நாம் வணக்கமுடன் நல்வரவு கூறுகின்றோம். ... ... ... (3)

क्षोणीमण्डलमण्डनायित विभो विद्यानिषद्यात्मक !
श्रीमन् सिंहमहोदय ! प्रगुणितं वात्सल्यमस्मासु ते ।
दर्शंदर्शममन्दनन्दथुभरं चित्ते वहन्तो वयं
हस्त्यद्रीशपदारविन्दसविधेऽद्याशास्महे मङ्गलम् ॥४॥

இந்நிலவுலகுக்குத் திலகமாய் விளங்கும் பெருமானே! கல்விகட்குக் களஞ்சியமே! ஸ்ரீக்ருஷ்ண குமாரஸிம்ஹஜீப்ரபுவே! இப்போது உமக்கு எம்மிடத்துத் தோன்றியுள்ள அன்பை மிகவுங்கண்டு அளவுகடந்த ஆனந்தமெய்தியுள்ள நாங்கள் ஸ்ரீதேவராஜ ஸ்வாமி திருவடிவாரத்தில் உமக்கு மங்களா சாஸனம் செய்கின்றோம். ... ... (4)

महादेवी लक्ष्मीर्वरददयिता ते प्रभुवर !
प्रदद्यादैश्वर्यं विपुलमनघां धर्मधिषणाम् ।
भवान् राज्यक्षेमप्रगुणनविधौ बद्धकुतुको
धरित्रीं शास्तामित्यनिशमभियाचेमहि हरिम् ॥५॥

பிரபுக்களிற் சிறந்த பெரியோரே! ஸ்ரீதேவராஜ ஸ்வாமியின் திவ்ய மஹிஷியாகிய பெருந்தேவித் தாயார் உமக்கு மிகுந்த செல்வத்தையும் அறநெறியில் நல்ல ருசியையும் தந்தருளவேணும். நீர் நமது ராஜ்யத்திற்கு நன்மையை வளர்ப்பதில் குதூஹலம் மிக்கவராகி நீண்டகாலம் இந்நிலவுலகை ஆண்டு கொண்டு விளங்க வேணுமென்று பகவானிடத்து வேண்டிக் கொள்ளக் கடவோம். ... ... (5)

काञ्चीवादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यविदुषैवम् ।
मद्रासमान्यगवर्नर्प्रभुवरसुस्वागतं न्यवेदि मुदा ॥६॥

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கர குலத்தில் தோன்றிய அண்ணங்கராசாரியர் சென்னை கவர்னரென்னும் மன்னர் பெருமானுக்கு இங்ஙனம் மகிழ்ந்து நல்வரவு கூறினர். (6)

**ஜய விஜயீபவ மஹாப்ரபோ!.**

**நல்லப்பா. ஜீயப்பங்கார் B. A.**

ஸன்னிதி வீதி, சின்ன காஞ்சீபுரம்.

Sri

An English rendering of the welcome address presented in the form of sanskrit slokas by Maha Vidwan P. B Annangaracharya Swami on the occasion of the visit of His Excellency Sri Krishna Kumar sinhaji, Mahāraja of Bhavanagar, the Governor of Madras to Sri Varadarajaswamy Temple Kancheepuram on 7—4—1950.

---

May it please your Excellency! Pray accept this humble address of welcome presented most heartily by P. B. Annangaracharya of Prathivadi Bhayankaram descent.

Thou art the most adored king of kings: Thy good name, Sri Krishna Kumar sinhaji! rebounds in every door: prince of princes, pride of learning, ocean of love! May Lord Varadha bless thee with health, wealth and fame ever more.

As our lord of lords thou shineth in Madras; as Bhavanagar Maharaj, as a pillar of culture thou cometh to-day as a pilgrim of Varadha to bow to His blessed feet, but we of the great city of kanchi take it that thou cometh to grant us thy Dharsan alone and are proud to extend our hand of welcome to thee.

It is the good of the common man that thou hast at thy heart; and rightly thou hast been chosen to adorn the highest throne: with thy wealth overflowing, thy virtues shining, thy fame far reaching, thou cometh to us: Bhavanagar Maharaj! we welcome thee most humbly to our midst and pray for thy prosperity.

As a bright star of our land dothy our Excellency shine: from thee spring all culture: Krishna Kumar Sinhaji! overjoyed at thy unbounded love towards us we welcome thee, not to ask any favour, but only to sing hail, hail to thee at the holy feet of Lord Varadha!

May Perundevi (the great goddess) shower on thee Her bounties limitless:
may Lord Varādha bless thee with long life and happiness,
that thou mayest tread the path of righteousness
and rule our land long with ever swelling love and gladness.*

---

* Rendered in English by N. JEYAPPAIYENGAR.

# எம்பெருமான் ஆராதனைக் கெளியன்.

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।

तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः ॥

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி,
ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந:.

இது கீதையில் (9-26.) உள்ளதொரு ச்லோகம். எம்பெருமான் ஆராதனைக்கு எளியன் என்பது இதன் பரமதாற்பரியம்.

இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோ விதங்களால் நெடுவாசி பெற்றிருப்பது போலே இவ்வகையாலும் நெடுவாசி பெற்றிருக்கிறான். 'ஆடு பலி கொடு' கோழி பலி கொடு' என்று அருந்தேவைகளை யிட்டு மஹா பரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள். எம்பெருமான்படியோ அப்படியன்று; நாம் இட்டது கொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம்.

எம்பெருமானுக்கு நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பதானது அவனுக்கு ஏற்கெனவே யில்லாத வொரு பூர்த்தியை உண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தை பெறுவதற்காகவா? என்று ஆராயவேண்டும். அவனோ அவாப்த ஸமஸ்த காமன். அன்னவன் நாமிட்டது கொண்டு பூர்த்தி யடைகிறானென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காக வன்றே. "वर्षबिन्दोरिवाब्धौ संबन्धात् स्वात्मलाभः—வர்ஷபிந்தோரிவாப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப:" என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்) பட்டர் அருளிச் செய்தபடியே மேகம் தான் ஸத்தை பெறுவதற்காகவே கடலிலும் வர்ஷிக்கிறதென்பது பரமார்த்தம். அது போலவே ஸ்வத: பரிபூர்ணனான பரம புருஷன் திறத்தில் நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம் பெறுவதற்கே யன்றி அவனை நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. ஆகவே, நாம் சிறந்த பெரும் பொருள்களைத் தேடி ஆராதிக்க வேணுமென்பதில்லை; இடுகிற பொருள் எதுவாயினும், இடுவது ப்ரேம பூர்வமாக வேணுமென்ப தொன்றிலேயே நியதியுள்ளது.

திருமங்கையாழ்வார் "கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும், முள்ளார் முளரியும் ஆம்பலு முன் கண்டக்கால், புள்ளாய் ஓரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று உள்ளாதாருள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே" என்று பெரிய திருமொழியில் (11-7-6) அருளிச் செய்கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக் கண்டாலும் இது எம்பெருமானுக்குச் சாத்தத் தக்கது' என்று அத்யவஸாயம் கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ள மாட்டோமென்று உரைக்கின்ற இப்பாட்டில் எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களும் கூட்டி யெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க வேணுமென்கிற சுத்த பாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; "செண்பகமல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி" என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவே யிருக்க வேணுமென்கிற நியதியில்லை; ஏதேனுமொரு புஷ்பமாக இருக்கலாமென்பதும் பக்திப் பெருங்காதலே முக்கியமானது என்பதும் தோற்றுவிக்கப்பட்டன.

*பத்ரம் புஷ்பம்* என்று மேலே யெடுத்த கீதாச்லோகமும், 'இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை; இடுகிறவன் நெஞ்சில் ஈரமுள்ளதா? என்பதொன்றையே பார்ப்பேன்' என்று ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றது. இதில் பக்தி சப்தம்இரண்டு தடவை விழுந்திருப்பது நோக்கத்தக்கது.

# மநோஹரர் ஸுபாஷிதங்கள்.

ஸம்ஸ்க்ருத ஸாஹித்ய ஸாகரத்தில் அரும்பெரு மணிகள் போன்ற சுலோகங்கள் ஸுபாஷிதங்களென வழங்கப் பெற்றுப் பல்லாயிரமுள்ளன. அவைகளில் சில கேண்மின்.

जीवनग्रहणे नम्राः गृहीत्वा पुनरुन्नताः ।
किं कनिष्ठाः किमु ज्येष्ठा घटीयन्त्रस्य दुर्जनाः ॥

ஜீவநக்ரஹணே நம்ராः க்ருஹீத்வா புநருந்நதாः,
கிம் கநிஷ்டாः கிமு ஜ்யேஷ்டா கடீயந்த்ரஸ்ய துர்ஜநாः. 1

ஏற்றச்சாலுக்குக்கடீயந்த்ர மென்று பெயர். துஷ்டர்கள் ஏற்றச்சாலுக்குத் தம்பிகளோ தமையன்களோ என்று ஸந்தேஹிக்கிறார் கவி. எனெனில்; குணத்தில் ஒற்றுமையைப் பற்ற.

ஜீவந மென்கிற வடசொல் தண்ணீருக்கும் ஜீவிகைக்கும் வாசகம், ஏற்றச் சாலானது தண்ணீரை மொண்டு கொள்வதற்காகத் தாழும்; தாழ்ந்து ஜீவநம் பெற்றவாறே தாழ்ச்சி யொழிந்து தலையேறி நிற்கும். துர்ஜந ஸ்வபாவமும் இங்ஙனே யாகும். தமக்கு ஜீவிகை வேண்டும்போது தாழ்ச்சி காட்டிக் காலைப்பிடித்து நிற்பார்கள். ஜீவிகை பெற்றவாறே மார்பு நெறித்து வணங்காமுடி மன்னராய்ச் செருக்குற்றிருப்பார்கள்—என்றவாறு.

இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தைப் பலகால் ஆவ்ருத்தி செய்யவேணும். ஏனென்னில் தாழ்ந்து நிற்பதும் தலைதூக்கி நிற்பதும் ஏற்றச் சாலுக்கு மாறிமாறி நடத்தலால். துர்ஜநங்களுக்கும் இதுவே நித்ய யாத்திரையாகும். ... (1)

करिष्यामि करिष्यामि करिष्यामीति वादिभिः ।
मरिष्यामि मरिष्यामि मरिष्यामीति विस्मृतम् ॥२॥

கரிஷ்யாமி கரிஷ்யாமி கரிஷ்யாமீதி வாதிபிः,
மரிஷ்யாமி மரிஷ்யாமி மரிஷ்யாமீதி விஸ்ம்ருதம். 2

நல்ல காரியங்களைச் செய்ய நினைப்பவர்கள் "गृहीत इव केशेषु मृत्युना धर्ममाचरेत्—க்ருஹீத இவ கேசேஷு ம்ருத்யுநா தர்மமாசரேத்" என்கிறபடியே தங்களுக்கு மரணம் ஸந்நிஹிதம் என்று நினைத்து அந்த நல்ல காரியங்களைக் காலதாமதமின்றிச் செய்து முடிக்கவேண்டுமே யல்லது 'பார்ப்போம், செய்வோம்' என்றிருக்கலாகாது என்றவாறு.

प्रथितं पातकिवर्गं कृतघ्न एको हि कृत्स्नमतिशेते ।
तमिमं क्रियमाणघ्नः तमपि दुरात्मा करिष्यमाणघ्नः ॥३॥

ப்ரதிதம் பாதகிவர்க்கம் க்ருதக்ந ஏகோஹி க்ருத்ஸ்நமதிசேதே,
தமிமம் க்ரியமாணக்நः தமபி துராத்மா கரிஷ்யமாணக்நः. 3

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பது திருக்குறள். க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதிः என்பார் வடமொழியாளரும்.

பிறர் செய்த உபகாரங்களை மறப்பவன் பஞ்ச மஹா பாதகிகளுள் சிறந்தவன். பிறர் செய்து கொண்டேயிருக்கிற உபகாரங்களை மறப்பவன் அவனிலும் சிறந்தபாபி.

"இவர் நாளைக்கு நமக்கு ஓர் பெரிய உபகாரம் செய்யப் போகிறார்" என்று தெரிந்து கொண்டு முந்தியே அப்பெரியோர்க்குத் தீங்கிழைக்குமவன் ஸர்வோத்க்ருஷ்டபாபி. [இது ஸங்கல்பஸூர்யோதயத்திலுள்ளது] ... ... ... (3)

आबद्धकृत्रिमसटाजटिलांसभित्तिः आरोपितो मृगपतेः पदवीं यदि श्वा ।
मत्तेभकुम्भतटपाटनलम्पटस्य नादं करिष्यति कथं हरिणाधिपस्य ॥

ஆபத்தக்ருத்ரிமஸடாஜடிலாம்ஸபித்தி:
ஆரோபிதோ ம்ருகபதே; பதவீம் யதி ச்வா,
மத்தேபகும்பதடபாடநலம்படஸ்ய
நாதம் கரிஷ்யதி கதம் ஹரிணாதிபஸ்ய ? 4

உலகத்தில் சிங்கம் முதலிய உயர்ந்த ஜந்துக்களும் நாய் முதலிய நிஹீந ஜந்துக்களும் பகவானுடைய ஸ்ருஷ்டியில் ஏற்பட்டிருக்கின்றன. ஒன்றினால் ஆகத் தக்க காரியம் மற்றொன்றினால் ஆகாது. சிங்கத்தின் உளைமயிர்களை நாய்க்கு ஏற்றிட்டு [அதாவது நாய்க்கு சிங்கக்கோலம்போட்டு] அந்த நாயை சிங்கம் வீற்றிருக்க வேண்டுமிடத்தில் உட்காரவைப்பதில் கஷ்டமில்லை; இதை எளிதாகச் செய்துவிடலாம். ஆனால் உண்மையான சிங்கம் செய்யக் கூடிய காரியத்தை அந்த நாய் செய்ய முடியுமா? என்பதுதான் ஆராயத்தக்கது. "மாரிமலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து, வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப் போதரும்" என்கிற இயல்வு க்ருத்ரிம ஸிம்ஹமாகிய க்ராம ஸிம்ஹத்திற்கு ஒருநாளும் வாய்க்காது என்றபடி. ஒரு மஹாராஜ ஸபையில் ஆஸ்தான வித்வானாயிருந்த ஒரு மஹா பண்டிதனைத் தள்ளி அந்த ஸ்தானத்தில் ஒரு யதாஜாதனைப் பண்டிதக்கோலம் செய்து பட்டுப் பீதாம்பரங்கள் போர்த்து உட்காரவைக்க முடியுமானாலும் கம்பீரமாக வாய் திறந்தொன்று பேசமுடியுமோ? என்பதுபோன்ற பல விஷயங்களுக்கு இது அந்யாபதேசம். ... ... (4)

हेम्नः खेदो न दाहेन छेदेन कषणेन वा ।
एतदेव महद्दुःखं यद्गुञ्जासमतोलनम् ॥

ஹேம்ந: கேதோ ந தாஹேந சேதேந கஷணேந வா,
ஏததேவ மஹத் து:க்கம் யத் குஞ்ஜாஸமதோலநம். 5

பொன்னைத் தீயிலிட்டுச் சுடுகிறோம்; உளியையிட்டு வெட்டுகிறோம்; உரைகலலிலே யிட்டுக் கனக்க உரைக்கிறோம்; இன்னமெத்தனை ஹிம்ஸைகள் செய்யினும் அவற்றால் பொன் சிறிதும் வருந்தமாட்டாது. வருத்தமில்லையென்பது மாத்திரமேயன்று; அந்த ஹிம்ஸைகளெல்லாம் தனக்குப்பரமபோக்யமே என்பது தோன்ற ஒளியை மிகுத்துக் காட்டுதலும் செய்யும். பொன்னைத் தீயிலிட்டுச் சுடும்போதும் உளியையிட்டு வெட்டும்போதும் உரைகல்லிலுரைக்கும் போதும் அதற்கு ஒளிமிகுதலைக் காண்கின்றோமன்றோ. ஆனால் அந்தப் பொன்னுக்கு ஒரு வருத்தம் மாத்திரம் சாலவுண்டு. அஃது என்னென்னில், 'மிக அற்பமானதொரு குன்றுமணியோடொக்க நம்மை நிறுப்பதே!' என்கிறவிதுவே அதற்கு மிக்க வருத்தமாம். தராசின் ஒருதட்டில் குன்றுமணியையும் மற்றொருதட்டில் பொன்னையுமிட்டு நிறுக்கக்காண்கிறோமன்றோ, பொன் என்று போற்றப்படுகின்ற நமக்கு கடைகெட்ட குன்றுமணிதானா ஈடாகவேணும் என வருந்தி மிகவும் குன்றிப்போகா நின்றதாம்.

இதன் ஸ்வாபதேசார்த்தமாவது — பகவான் தூதனுப்பப்பெறுகை, தாம்பினால் கட்டுண்கை—முதலானவற்றால் சிறிதும் வருத்தமுறான்; அவற்றால் மிக்க முகமலர்ச்சி

யும் பெற்றிடுவான். பாண்டவதூதன் என்றும் தாமோதரன் என்றும் சந்தோஷமான திருநாமம் வஹித்து விளங்கவும் காண்கிறோம். * ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயனாகிய தன்னை அதிக்ஷுத்ரவஸ்துக்களான சிலவற்றோடே ஒப்பிடுகிறார்களே! என்பதுதான் துக்க ஹேதுவாம். "ஒட்டுரைத்திவ் வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதீ!" என்றார் நம்மாழ்வாரும்.

प्रयत्नः खलु कर्तव्यः मार्जारस्तन्निदर्शनम् ।
जन्मप्रभृति गौर्नास्ति पयः पिबति नित्यशः ॥

ப்ரயத்ந: கலு கர்த்தவ்ய: மார்ஜாரஸ் தந்நிதர்சநம்,
ஜந்மப்ரப்ருதி கௌர் நாஸ்தி பய: பிபதி நித்யச:." 6

"முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்" என்றபடி முயற்சிசெய்து கொண்டேயிருந்தால் அவசியம் பலன் கிடைத்தே தீரும். இவ்விஷயத்திற்குப் பூனையே சான்றாகும். பூனையானது விலைகொடுத்துப் பசு வாங்குவதில்லை; புல் சுமையும் வாங்குவதில்லை, ஆனாலும் விடாமுயற்சியினால் அது பால் குடியாத நாளில்லை. ... (6)

लघुस्समतुलारूढो ह्यधरीकुरुते गुरुम् ।
अत्र मध्यस्थजिह्वैव तारतम्यपरीक्षिणी ॥

[லகுஸ் ஸமதுலாரூடோ ஹ்யதரீகுருதே குரும்,
அத்ர மத்யஸ்தஜிஹ்வைவ தாரதம்யபரீக்ஷிணீ. 7

உலகத்தில் அல்பனான ஒரு மனிதன் மிக்க பெரியானோடு ஸமமாகக் கலந்து பழக ஆரம்பித்து உடனே அப்பெரியானைக் கீழேதள்ளித் தான் மேலேறி நிற்க ஆசைப்படுவது இயல்பு. இவ்விஷயத்தை நாம் திராசு தட்டில் காணலாம். ஒரு தட்டில் மிகவும் கனத்ததான வொரு பொருள் இருக்கின்றது; லேசான [அற்பமான] ஒரு பொருளானது அந்த கனத்த பொருளோடு ஸமமாகத் தானும் அதற்கிடான மற்றொருதட்டில் ஏறி யிருந்துகொண்டு உடனே என்ன பண்ணுகிறதென்றால், அந்த கனத்தபொருளைக் கீழே யிறக்கிவிட்டுத் தான் மேலேறி நிற்கின்றது. (கனமுள்ள பொருள் தாழ இழிவது இயல்பு.) ஆக இப்படி அல்பவஸ்து மேலேறி நிற்கவும் அது கனத்தவஸ்துவைத் தாழ்மைப் படுத்தவும் நேர்ந்தாலும் எந்தவஸ்து உண்மையில் உயர்ந்ததோ, எந்த வஸ்து உண்மையில் தாழ்ந்ததோ இவ்வுயர்த்தி தாழ்வுகளை உள்ளபடி காட்டுவதற்கு ஒருவஸ்து இருக்கின்றது; அது ஏது என்னில்;

[मध्यस्थजिह्वा = மத்யஸ்த்தஜிஹ்வா] இதற்கு இரண்டுபொருள். (1) நடுவிலே இருக்கின்ற நாக்கு. (2) நிஷ்பக்ஷபாதிகளாய் மத்யஸ்தர்களாய் இருக்கின்றவர்களுடைய நாக்கு. துலாக்கோலில் நடுவிலே யிருக்கின்ற நாக்கைக்கொண்டு தாரதம்யம் அறிகின்றோம். மத்யஸ்த்தர்களாயுள்ளவர்கள் 'இன்னான் அல்பன், இன்னான் கனவான்' என்பதை அநாயாஸமாகச் சொல்லி விடுவார்கள் என்றபடி. ... ... 7

तृणाल्लघुतरस्तूलः तूलादपि च याचकः ।
वायुना किं न नीतोऽसौ मामयं प्रार्थयेदिति ॥

த்ருணாத் லகுதாஸ்தூலஸ்தூலாதபி ச யாசக:,
வாயுநா கிம் ந நீதோஸௌ மாமயும் ப்ரார்த்தயேதிதி. 8

Released by Maran's Dog ;Toronto, Canada



புல்லைக் காட்டிலும் பஞ்சு லேசு; பஞ்சைக்காட்டிலும் யாசகன் லேசு—என்று ஒருவர் சொன்னார். அவரைப் பார்த்து மற்றொருவர்கேட்டார்—நீர்சொல்வது உண்மையானால் காற்றானது புல்லையும் பஞ்சையும் அடித்துக் கொண்டு போகிறப்போலே யாசகனையும் அடித்துக் கொண்டு போகவேணுமே! அப்படி எங்கும் காணவில்லையே! ஏன்? என்று.

அதற்கு அவர் பதில் சொல்லுகிறார்—[மாம் அயம் ப்ரார்த்தயேத் இதி] காற்று யாசகனையும் அடித்துக்கொண்டுபோகத் தடையில்லை; ஆனால் அதற்கு ஒருபயம்; இந்த யாசகன் அதைக்கொடு இதைக்கொடு என்று யாரையும் பிடுங்கித்தின்பதையே இயல்வாகவுடையனாதலால் நம்மையும் பிடுங்கித்தின்பன் என்று அஞ்சியே காற்றானது யாசகனைக் கொண்டுபோவதில்லை, ... ... ... 8

कुम्भः परिमितमम्भः पिबति, पपौ कुम्भसंभवोऽम्भोधिम् ।
अतिरिच्यते सुजन्मा कश्चिज्जनकान्निजेन चरितेन ॥

[கும்ப: பரிமிதமம்ப: பிபதி, பபௌ கும்பஸம்பவோம்போதிம்,
அதிரிச்யதே ஸுஜந்மா கச்சித் ஜநகாந் நிஜேந சரிதேந. 9

உலகத்தில் சிலபேர்கள் தாங்கள் தம் தந்தையிற் காட்டிலும் அதிசயித்த செய்கை யுடையவர்களாக ஆவதுண்டு. இதற்கொரு த்ருஷ்டாந்தம் காணலாம். குடமானது ஒரு மரக்கால் அல்லது இரண்டு மரக்கால் ஜலத்தையே கொள்ளக்கூடியது; குடத்தில் நின்று பிறந்தவரான அகத்திய முனிவரோ வென்னில், கடல் முழுவதையும் பருகவல்லவரானார். ஜநகமான குடத்தின் செய்கையிற் காட்டிலும் தஜ்ஜந்யரான முனிவரின் செய்கை மிக அதிசயித்ததாயிற்றன்றோ. அகத்தியர் கடல் பருகின வரலாறு புராணப்ரஸித்தம். ... ... ... ... (9)

Released by Maran's Dog ,Toronto, Canada

अतसीसुमसुकुमारात् अवयवसौन्दर्यलेशजितमारात् ।
कोसलसुताकुमारात् कोऽन्यो देवः करोतु सुखमारात् ॥

அதஸீஸுமஸுகுமாராத் அவயவஸௌந்தர்யலேசஜிதமாராத்,
கோஸலஸுதாகுமாராத் கோந்யோ தேவ: கரோது ஸுகமாராத். 10

முற்காலத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ணவ பண்டிதர் ஒரு நீசப்ரபுவிடத்தில் யாசகத்திற்குச் சென்றார். அந்த பிரபுவுக்கு மாராத் என்று பெயர். 'என் பெயரை யிட்டுக் கவிபண்ணினீராகில் காசுகொடுக்கிறேன்' என்று கூறின அந்தப் பிரபுவை திருப்தி படுத்த விரும்பிய பண்டிதர் "வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்"; என்கிற தமது உறுதியையும் விடமாட்டாதவராய் இந்த ச்லோகத்தை உடனே இயற்றிக் கொடுத்தாராம். 'மாராத்' என்கிற பெயர் இதில் அடிதோறும் வந்திருக்கின்றது. ஆனால் ச்லோகம் முழுவதும் ஸ்ரீராமபிரான் விஷயம். (அதஸீஸுமேத்யாதி.) காயாம்பூப்போல் ஸுகுமாரனும், வடிவழகின் ஏகதேசத்தினால் மன்மதனை வென்றவனுமிருக்கிற கௌஸல்யாகுமாரனைக் காட்டிலும் வேறு எந்த தெய்வம் விரைவில் நன்மை செய்யும் என்பது கருத்து. ... ... ... (10)

Released by Maran's Dog ,Toronto, Canada

# பெரியார்களுக்குரிய பெருமை.

பெரியார்களின் லக்ஷணங்களைப் பலவகையாக சாஸ்திரங்கள் கூறுகின்றன. அந்த லக்ஷணங்களுள் *ஸ்காலித்யே சாஸிதாரம்* என்பது மொன்ருகக் காண்கிறது. இது தலைமையான லக்ஷணமென்றும் கொள்ளத்தகும். இதன்பொருள் யாதெனில்; தெரியா தவர்கள் தவறுதலாக நடந்துகொண்டால் திருத்திப் பணிகொள்ளவேண்டியது பெரியாருடைய கடமையென்றபடி. *பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட* என்று நம்மாழ்வார் அருளிச்செய்கிறுர். அவ்விடத்து ஈட்டில் கிடாம்பியாச்சான் விஷயமான இதிஹாஸமுமொன்று காட்டப்பட்டுள்ளது. உண்மையில் பெரியார்கள் சிறியார்களின் தவறுகளை நிர்தாக்ஷிண்யமாகக் கண்டித்துத் திருத்திப் பணிகொள்ளவே வேண்டும்.

*ஸுலபாஃ புருஷா ராஜந் ஸததம் ப்ரியவாதிநஃ, அப்ரியஸ்ய து பத்த்யஸ்ய வக்தா ச்ரோதா ச துர்லபஃ* என்கிற ஸ்ரீராமாயணத்தின்படியே, ப்ரியமான வார்த்தைகளைச் சொல்லித் தவறுதல்களை வளரச்செய்பவர்கள் விசேஷமாகக் காணப்படுகிறுர்களே யொழிய, ஹித வசனங்களைச் சொல்லி மீட்பாருமில்லை; சொன்னுல் கேட்பாருமில்லை. கேட்பார் இல்லையென்ருலும் பெரியார்கள் தங்கள் பணியை [அதாவது, ஹித வசனங்கள் சொல்லித் தவறுகள் திருத்துவதை] ஒரு நாளும் கைவிடக்கூடாது. அதற்கு உடனே பலன் கிடைக்காவிட்டாலும் தாமதித்தாவது பலன்கிடைத்தே தீரும். நல்ல குலத்திலே பிறந்தவர்கள் முகக்ஷெளரம் செய்துகொள்ளுதல், சிகையறுத்துக்கொள்ளுதல், பாழும் நெற்றியாயிருத்தல், ப்ராஹ்மண்ய லக்ஷணங்களையும் ஸ்ரீவைஷ்ணவத்வ லக்ஷணங்களையும் அறவே துறந்திருத்தல், வ்ராத்யர்களோடு உடனுண்ணுதல் முதலியன செய்யக் கண்டால் பெரியார்கள் தங்களுடைய வாக்கு செல்லக்கூடிய இடங்களிலாவது கூசாமல் ஹிதங்களைச்சொல்லி மீட்கப்பார்க்கவேண்டும். அப்படி பார்ப்பது பயன்படாதென்று தோன்றினுல் அன்னவர்களோடு உறவை அறவே அறுத்துக்கொள்வது வைதிகர்களான பெரியாருடைய முதற்கடமையாகும்.

விவாஹத்திற்கு ஏதோ சாரதாசட்டம் ஏற்பட்டிருந்தாலும் உபநயநத்திற்கு இன்றுவரையில் ஒருசட்டமும் ஏற்பட்டிருக்கவில்லை. 16, 18, 20 வயதுக்குங்கூட உபநயனத்தைப்பற்றி ஆலோசனையே செய்யாத குடும்பங்கள் பல. அப்படிப்பட்ட குடும்பஸ்தர்களோடு ஸர்வாத்மனா கலந்துபழகுகிற வைதிகப் பெரியார்களே எங்கும் காணப்படுகிறுர்கள். இதைக் கண்டிக்க நினைப்பாருமில்லை. 20 வயதுக்குமேல் நடக்கிற உபநயந மஹோத்ஸவங்களுக்கு முதல் பங்க்தியில் எழுந்தருளியிருந்து அமுதுசெய்ய வைதிகப்பெரியார்களே முன்னம் பவித்ரபாணிகளாய் எழுந்தருள்வதை எங்குங் காண்கிறோம்.

உத்யோகநிமித்தமாக தேசாந்தரமோ த்வீபாந்தரமோ சென்று யதேச்சமாக வாழ்ந்துவருமவர் மனைவி கர்ப்பிணியானுளென்று பும்ஸவநஸீமந்தகலியாணத்திற்காக ஸ்வக்ருஹம்வந்து சேர்ந்தவாறே, நெருப்பையலம்புகிற திருத்தகப்பனுர் அந்த சுப முஹூர்த்தத்தை முன்னின்று நடத்திவைக்கிறுர். * ஸந்த்யாஹீநோசுசிர் நித்யம் அநர்ஹஸ் ஸர்வகர்மஸு * என்கிறவசனம் அந்த ஸ்வாமியறியாததன்று. தம் திருக்குமாரருடைய உத்யோக ஸம்பிரமத்தில் ஸந்தியாவந்தனுதிகளை நெஞ்சால் நினைக்கவும் அவகாசம் கிடையாதென்பதையும் அவர் அறியாதவரல்லர். எல்லாமறிந்தும், இதுகண்டிக்க முடியாதவிஷயமென்றும், கண்டித்தும் பயன்படமாட்டாத விஷயமென்றும் திடமாக எண்ணி ஆனந்தமாகக் கலந்துபரிமாறுகிறுர். உலகம் முழுவதுமே இந்த நிலையிலுள்ளது. இப்படிப்பட்ட மக்களோடு கலந்துபரிமாற மனம்பிடிக்காமல் விட்டு அகலும் பெரியார்கள் * ஸஹஸ்ரேஷு கச்சித் * என்றிருக்கலாம். நிலைதிரிந்த் ஆசாரங்களை நிம்மதியாக ஸஹித்திருப்பவர்களே எங்கும் நிறைந்துள்ளார்கள்.

அப்படிப்பட்ட மஹான்கள் * ஸ்காலித்யே சாஸிதாரம் * என்று முன்னே ப்ரஸ்தாவிக்கப்பட்ட தங்கள் கடமையை எவர் விஷயத்தில் முக்கியமாகச் செலுத்துகிறுர்களென்ருல், ஸன்னிதிகளுக்குச் சென்று பெருமாள்ஸேவை செய்பவர்களிடத்திலேயே தாராளமாகச் செலுத்திவருகிறுர்கள். சில வருஷங்களுக்கு முன்பு ஸன்னிதிகளின் ஸேவையைத் துறந்து பெரியார் விலகநேர்ந்தது யாவருமறிந்ததே. எந்த எண்ணத்தோடு விலகினுர்களென்னில்; 'இனி ஸன்னிதிகளை ஆயுள் உள்ளவரையில் இழந்தேயிருப்பது' என்கிற எண்ணத்துடன் விலகினுர்களல்லர். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவ்வெண்ணமிராது.

"அதர்க்கணமாக நடக்கும் தர்மக்ஷோபத்தை வைதிகர்களுங்கூட அடியோடு ஆக்ஷேபியாமல் ஆமோதித்துவிட்டார்களே!" என்று பலரும் அபவாதம் சொல்லுவார்களே யென்றும், இவ்வபவாதம் நீண்டகாலம் நிலைத்திருந்து நம்குடிக்குப்பெரிய அவத்யமாய் முடியுமேயென்றும் அஞ்சி அதற்காகவே விலகினார்கள். அப்படி விலகினவர்களுள் அடியேனும் ஒருவன். 'தர்மக்ஷோபமாக நடந்த காரியம் சாஸ்த்ர விருத்தமானது' என்பதை விபுலமாக நிரூபித்துச் சுமைசுமையாகப் பலபாஷைகளில் எழுதி வெளியிட்டவனுமடியேன். சாஸ்த்ரார்த்த தத்துவமிருக்கும்படியைக் காட்டித் தீரவேண்டுவது நமது கடமை என்று அவ்வளவும் செய்ததேயொழிய "இனி திவ்யதேசங்கள் ஸர்வாத்மநா நமக்கு த்யாஜ்யம்" என்கிற எண்ணம் நெஞ்சில் ஒரு மூலையிலும் ஒரு நிமிஷமும் உதித்ததில்லை. கணவன் முடிந்தானென்று கதவடைத்துக் கிடக்கும் காதலிகள் சில மாதங்களோ சில வருஷங்களோ அப்படிகிடந்து பிறகு ஒருவாறு மனம்தேறித் திரளிலே வந்து தலைகாட்டவே காண்கிறோம். அப்படியே நம்முடைய தர்மதேவதை பங்கமடைந்து விட்டதே யென்கிற வருத்தத்தை நாமும் சில மாதங்களோ சில வருஷங்களோ காட்டலாமேயல்லது, இனி நமக்கு ஸன்னிதிகள் ஆயுஸ்ஸுக்கும் வேண்டாமென்று குடநீர் வார்த்துக் கிடப்பது விவேகிகளின் க்ருத்யமாகாது. * தஸ்மாத் அபரிஹார்யேர்த்தே ந த்வம் சோசிதுமர்ஹஸி * என்று கீதையில் கண்ணன் அர்ஜுனனது கண்ணைத் துடைத்ததை அறியாதாரில்லையே,

சென்ற வருஷத்தில் ஸ்வாமி யெம்பெருமானாருடைய மஹோத்ஸவத்திற்கு முன்னாக அடியேன் ஸ்ரீபெரும்பூதூருக்கு விடை கொண்டு அங்கே வித்வத்திலகராய் விளங்கும் ஸ்ரீ. உ. வே. ஆஸூரி ராமாநுஜாசார்ய ஸ்வாமி திருவடிகளில் தொழுது ஸ்வாமி மங்களாசாஸனத்தை இன்னமும் இழந்திருக்கலாகாதென்று ஸவிநயம் விஜ்ஞாபித்தபோது அந்த ஸ்வாமி அற்புதமாகவும் ஸாரமாகவும் அருளிச்செய்த வார்த்தை மிக்க சுவையுடையதாயிருந்தது. வேறு எந்த வித்வான்களும் அப்படியருளிச்செய்ய முடியாது. அது என்னவெனில்; ஸன்னிதி சுத்தமா? அசுத்தமா? நாம் போவது தகுமா தகாதா? என்கிற விசாரத்தில் அந்த ஸ்வாமியின் திருவுள்ளம் இறங்கவேயில்லை. உண்மையைக் கண்டறிந்து அந்த ஸ்வாமி ஸாதித்ததாவது—

"ஏதோ ப்ரபலமான அபசாரம் செய்து அவனுடைய நிக்ரஹத்தை அநுபவித்து வருகிறோம்; அவனுடைய ஸங்கல்பம் உள்ளவரையில் இதை நாம் அநுபவித்துத்தானேயாகவேண்டும். இடையில் அதை அறுத்துக்கொள்ள நாமார்? அப்படி நாமாக அறுத்துக்கொண்டால் இன்னமும் கொடிய நிக்ரஹமன்றோ நேரும்" இத்யாதி,

வாஸ்தவமாய் இதுதான் உண்மையான சாஸ்த்ரார்த்தம். மற்றுள்ள எந்த பெரியாரும் இங்ஙனே ஸாதிக்கக் கேட்டதில்லை. சிலர், தாங்கள் விலகிநின்று ப்ரதிநிதிகளையனுப்பி வருமானங்களுக்கு லோபமில்லாதபடி பார்த்துக்கொள்வாரும், பெருமாள் முகத்தில் விழியாமலேயிருந்து வாஹந ஜீர்ணோத்தாரணாதி கைங்கரியங்களுக்கு நியமிப்பாரும்......இப்படியாக விருக்கும் இவ்வுலகில் * தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம் * என்றும் * ஸூக்ஷ்ம: பரமதுர்ஜ்ஞேயஸ் ஸதாம் தர்ம: ப்லவங்கம! * என்றும் நினைப்பதே தகுதி. சிலநாள்களிலும் சிலமாதங்களிலும் சிலவருஷங்களிலும் எவரெவருடைய நிக்ரஹம் முடிவுபெற்றதோ அவரவர்கள் * அங்கணிரண்டுங்கொண்டெங்கள்மேல் நோக்குதியால், எங்கள்மேல் சாபமிழிந்தேலோ ரெம்பாவாய் * என்று வாய்வெருவிக்கொண்டு மங்களாசாஸனம் செய்வதிலும் * குழாங்களாயடியாருடன் கூடிநின்றுடுவதிலும் சிலர் பொறுமைகொண்டு பழித்தாலும் அதைச் செவியேற்காமல் * இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்? * என்கிற வுறுதிகுன்றாமல், எங்ஙனே சொல்லிலுமின்பம் பயக்குமவையான கீர்த்திக்கனியென்னும் கவிகளை உண்டுகளித்து, உம்பரென்குறை யென்று தோள்தட்டியிருப்பதே நன்று. * நமர்களோ சொல்லக் கேண்மின் * என்கிற ஆழ்வாருபதேசத்திலே ருசியுடையார்க்கு இவ்வளவே போதும். இன்னமும் வேண்டுமாகில், வேண்டுவன நல்குவோம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரிய தாஸன்.

9.4.50



திருக்கண்ணபுரம்
**பட்டப்பாஸ்வாமியென்று ப்ரஸித்தரான**
திருவேங்கடாசாரியர் ஸ்வாமி.
(வைகுண்டவாஸி.)

திருநீர்மலை கோமடம் கண்ணமாசாரியர் ஸ்வாமி

| | | | |
|---|---|---|---|
| க்ஷிதி கமல நிவாஸா- | நிலமகளும் திருமகளுமாகிற | பத்ரல: | இலைகள் நிரம்பியதாய் |
| கல்பவல்லீ- | கற்பகக்கொடிகளின் | தத்தத்வரமய பல நம்ர: | அவரவர்கள் பெறும் வரங்களாகிற பழங்களினால் வணக்கமுற்றதான |
| ஸலீல உல்லுடக | விலாஸத்தோடு கூடின ஆலிங் கனத்தினால் | ரங்கதாமா இதி பாரிஜாத: | ஸ்ரீரங்கநாதனென்னும் பாரிஜாத வ்ருக்ஷமானது |
| தச திசா உத்யத் | பத்துத்திசைகளிலும் விளங்கு கின்ற | மே | என்னுடைய |
| | | ச்ரமம் | விடாயை |
| யௌவந ஆரம்ப ஜ்ரும்ப: | யௌவநத் தொடக்கத்தின் வைலக்ஷண்யத்தையுடைத் தாய், | அபஹாரதாம் | தொலைத்திடுக. |

***—''நிவாஸவ்ருக்ஷஸ் ஸாதூநாம்'' என்றும் ''வாஸ—தேவதரு'' என்றும், எம்பெருமானை நிழல்தரும் வ்ருக்ஷமாகச் சொல்லியிருப்பதுண்டு: ''எனக்கே தன்னைத் தந்த கற்பகம்'' என்று கல்பவ்ருக்ஷமாகவும் நம்மாழ்வாரருளிச் செய்தார், அந்த ஸமாதியைக் கொண்டே இந்த ச்லோகமருளிச் செய்கிறார்; கல்பவ்ருக்ஷத்திலே கற்பகக்கொடிகள் படருமாகையால் இந்த ரங்கநாதனாகிற கல்பவ்ருக்ஷத்திலே திருமகளும் மண்மகளுமாகிற கற்பகக் கொடிகள் படரப்பெற்றன வென்கிறார். * கலசஜலதிகந்யா வல்லரீ கல்பசாகீ* என்றார் தேசிகனும்.

[தசதிசோத்யத் யௌவநாரம்பஜ்ரும்ப:] ஸ்ரீரங்கவிமானத்தில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய யௌவநம் பத்துத்திசைகளிலும் வியாபித்ததென்றால் தாத்பர்யம் விளங்கவில்லையே யென்பர் சிலர்; பரப்ரஹ்மரூபியான ஸ்ரீரங்கநாதனுடைய ஸ்வரூபம் ஸர்வதேச வ்யாபகமாகையாலே அவ்வஸ்துவுக்கு உண்டாகும் யௌவநமும் ஸர்வவ்யாபகமாயிருக்குமிறே. பரமரஸிகைகளான பிராட்டிமாரோடே எம்பெருமான் லீலா ரஸங்கள் அநுபவிக்கும்போது ஸாதாரணமான திருமேனியோடு அநுபவிக்கப் பாத்தம் போராமையாலே ''தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் தாள்களாயிரத்தாய்'' என்றாப் போலே விச்வரூபமெடுத்து அநுபவிக்க வேண்டியதாயிருக்கும்; அவ்விஷயத்தை இங்கு அநுஸந்திப்பது. இவர்தாமே ஸ்ரீகுணரத்ந கோசத்தில் ''*அநுகலதநுகாண்டாலிங்கநாரம்ப சும்பத்ப்ரதிதிசபுஜசாக ஸ்ரீஸகாநோகஹர்த்தி:* என்றும் * போகோபோத்காத கேலீசுலகித பகவத் வைச்வ ரூப்யாநுபாவா'' என்றும் *தசசத பாணி பாத ......விநிமஜ்ஜதி தே * என்றும் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளின் தாத்பர்யத்தையும் நோக்கினால் இந்த ச்லோகத்தின் கருத்து ஹ்ருதயங்கமமாகும்,

யௌவநாரம்பஜ்ரும்ப:=யௌவநத்தின் ஆரம்பஸமயத்தில் இருக்கக்கூடிய மேனுணிப்பே எப்போதும் நிலைத்திருக்குமென்பது விவக்ஷிதம். நாள்செல்லச் செல்லத் தளருகை யின்றியே நித்யயுவாவா யிருக்கை. ஆழ்வான் வரதராஜஸ்தவத்தில் (56) ''ரம்பாஸ்தம்பா:........ ததி நதா யௌவநாரம்பஜ்ரும்பா:'' என்றருளிச்செய்தது இங்கே நினைவுக்குவரும்,

தத்தத்வரமயபலநம்ர:= வ்ருக்ஷமானது பழங்கள் நிரம்பப்பெற்றுக் கனத்தினால் வணங்கியிருக்கும்; எம்பெருமானும் ''ஸகலபலப்ரதோ ஹி விஷ்ணு:'' என்கிறபடியே அவரவர் விரும்பும் பலவகைப் பலன்களையும் அளிக்கவல்ல சக்தியினால் புஷ்கலனாயிருப்பவனென்கை. பத்ரல:=வ்ருக்ஷத்தில் இலைகள் பசுகுபசுகென்று செறிந்திருக்கும். எம்பெருமான் பக்ஷத்தில் யௌவநப்ராதுர்ப்பாவத்திற்கு உரிய திவ்யாவயவங்களின் புகர் பத்ரசப்தலக்ஷ்யமாகும். ஆக இவ்வகைகளாலே பாரிஜாத வ்ருக்ஷமென்னலாம்படியுள்ள அழகிய மணவாளன் தாபஹரத்வமாகிற வ்ருக்ஷகார்யத்தை என்திறத்தில் செய்தருள வேணுமென்றதாயிற்று. ... ... ... (68)

Released by Maran's Dog ,Toronto, Canada



संभाषमाणमिव सर्ववशंवदेन मन्दस्मितेन मधुरेण च वीक्षणेन ।
दिव्यास्त्रपुष्पितचतुर्भुजमत्युदारं रङ्गास्पदं मम शुभाश्रयमाश्रयाणि ॥६९॥

ஸம்பாஷமாணமிவ ஸர்வவசம்வதேந
மந்தஸ்மிதேந மதுரேண ச வீக்ஷணேந
திவ்யாஸ்த்ர புஷ்பிதசதுர்ப்புஜமத்யுதாரம்
ரங்காஸ்பதம் மம சுபாச்ரயமாச்ரயாணி.

Released by Maran's Dog ,Toronto, Canada

| | | | |
|---|---|---|---|
| ஸர்வ வசம்வதேந | எல்லாரையும் வசிகரிக்கவல்ல | அதி உதாரம் | மிகவும் உதாரரும் |
| மதுரேண | இனிமையான | மம | அடியேனுக்கு |
| மந்தஸ்மிதேந | புன்முறுவலாலும் | சுப ஆச்ரயம் | நல்ல புகலிடமாயிருப்பவருமான |
| வீக்ஷணேந ச | நோக்காலும் | ரங்க ஆஸ்பதம் | அரங்கமா நகரமர்ந்த பெருமானை |
| ஸம்பாஷமாணம் இவ (ஸ்திதம்) | பேசுகிறவர்போலே யிருப்பவரும் | ஆச்ரயாணி | ஆச்ரயிக்கக் கடவேன். |
| திவ்ய அஸ்த்ர புஷ்பித சதுர்ப்புஜம் | திவ்யாயுதங்களினால் பூத்திருக்கின்ற நான்கு திருக்கைகளையுடையவரும் | | |

* * *—அபிமதஜநதர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி வெளிவருகின்ற அவ்யக்தமதுர மந்தஹாஸவிலாஸத்தினாலும் பரமக்ருபைபொலிகின்ற திருக்கண்ணோக்கினாலும் நிறைந்த திவ்யமங்களவிக்ரஹத்தை நோக்குங்கால் 'அழகிய மணவாளப் பெருமாள் அபிமத ஜநங்களோடே சோதிவாய் திறந்து வார்த்தையருளிச் செய்கிறாரோ' என்று சங்கிக்கலாம்படியிருக்குமிறே. அந்த நிலைமையை அநுபவிக்கிறாரிதில்.

Released by Maran's Dog ,Toronto, Canada

ஸர்வவசம்வதேந = தத்புருஷஸமாஸமாகக் கொண்டால் 'எல்லார்க்கும் எளிதான மந்தஹாஸம்' என்று பொருள்படும்; பஹுவ்ரீஹி ஸமாஸமாகக்கொண்டால் 'எல்லாரையும் வசப்படுத்திக் கொள்ளுகிற மந்தஹாஸம்' என்று பொருள்படும்.

திவ்யாஸ்த்ரபுஷ்பித சதுர்ப்புஜம் = திருவாய்மொழியில் "சன்மம் பலபல செய்து" (3—10—1.) என்றபாட்டின் ஈட்டிலே 'ஒள்வாள் தண்டுகொண்டு' என்றவிடத்திலே—'ஒரு கற்பகத்தரு பணைத்துக் கணுத்தோறும் அரும்பினாற்போலே யாயிற்று வடிவும் திவ்யாயுதங்களும் சேர்ந்த சேர்த்தி இருப்பது" என்றருளிச் செய்ததை இங்கு அநுஸந்தேயம். கீழ்ச்லோகத்தில் எம்பெருமானைப் பாரிஜாதவ்ருக்ஷமாகச் சொல்லி இலைகளும் பழங்களும் நிரம்பியிருக்கின்றமையை அதுதன்னிலே அருளிச்செய்தார்; புஷ்பஸம்ருத்தியை இதிலே அருளிச்செய்தாராயிற்று.

ரங்காஸ்பதம் = ஸ்ரீரங்கவிமாநத்தை ஆஸ்பதமாக [இருப்பிடமாக] உடையவர். சுபாச்ரயமென்றது சுபமான ஆச்ரயமென்றபடி. ஒரு கெடுதலும் விளையாதே நன்மைகளே விளையத் தகுந்த புகலிடமென்கை. ... ... ... (69)

एते शङ्खगदासुदर्शनभृतः क्षेमंकरा बाहवः पादद्वन्द्वमिदं शरण्यमभयं भद्रं च वो हे जनाः !
इत्यूचुष्यभयङ्करे करतले स्मेरेण वक्त्रेण तद्व्याकुर्वन्निव निर्वहेन्मम धुरं श्रीरङ्गसर्वंसहः ॥७०॥

ஏதே சங்ககதாஸுதர்சநப்ருதஃ க்ஷேமங்கரா பாஹவஃ,
பாதத்வந்த்வமிதம் சரண்யமபயம் பத்ரஞ்ச வோ ஹே ஜநாஃ
இத்யூசுஷ்யபயங்கரே கரதலே ஸ்மேரேண வக்த்ரேண தத்,
வ்யாகுர்வந்நிவ நிர்வஹேந்மம துரம் ஸ்ரீரங்கஸர்வம்ஸஹஃ 70

Released by Maran's Dog ,Toronto, Canada

| | | | |
|---|---|---|---|
| ஹே ஜநா: | " ஓ ஜனங்களே !, | இதி | என்ற |
| சங்க கதா ஸுதர்சந ப்ருத: | சங்கு கதை சக்கரம் ஆகிய இவற்றை ஏந்தியிருக்கின்ற | அபயங்கரே கரதலே ஊசுஷி ஸதி | அபய முத்ரையோடு கூடின திருக்கையானது தெரிவிக்குமளவில் |
| ஏதே பாஹவ: | இந்தத் திருக்கைகள் | தத் | அவ்விஷயத்தை |
| வ: | உங்களுக்கு | ஸ்மேரேண | புன்முறுவல்கொண்ட |
| க்ஷேமங்கரா: | க்ஷேமமளிப்பன ; | வக்த்ரேண | திருமுக மண்டலத்தினால் |
| இதம் பாத த்வந்த்வம் | இத்திருவடியிணைகள் | வ்யாகுர்வத் இவ (ஸ்தித:) | வியாக்யானம்செய்பவர் போன்றுள்ள |
| (வ:) | உங்களுக்கு | ஸ்ரீரங்க ஸர்வம் ஸஹ: | திருவரங்கப் பெருமாள் |
| சரண்யம் | புகலாயும் | | |
| அபயம் | அபய மளிப்பதாயும் | | |
| பத்ரம் ச | நன்மை தருவதாயு மிருக்கின் றது'' | மம பாரம் நிர்வஹேத் | அடியேனுடைய பாரங்களை தாமே நிர்வஹிக்கக் கடவர். |

* * *—நம்பெருமாளுடைய நான்கு திருக்கைகளுள் ஒன்று அபயமுத்ரையோடு கூடியது; மற்ற மூன்று திருக்கைகள் திருவாழி, திருச்சங்கு, கதை ஆகிய மூன்று திவ்யாயுதங்களையுடையன. ஆகவிந்த நான்கு திருக்கைகளுள் அபயமுத்ரிதமான ஒரு திருக்கையானது ஸகல ஜநங்களையும் நோக்கி 'வாரீர்கோள்! சங்க சக்ரகதைகளை ஏந்தியுள்ள இந்தக் கைகளானவை உங்களுக்கு எல்லா வகையான க்ஷேமங்களையும் விளைப்பன; ஸர்வஸமாச்ரயணீயமாய் விளங்குகின்ற இந்த அடியிணையானது உங்களுடைய பயங்களை யெல்லாம் தொலைத்து அநிஷ்டநிவ்ருத்தி பூர்வமாக இஷ்டங்களை யளிக்க வல்லது' என்று ஸூசனை செய்வது போன்றுளதாம்; இவ்விதமாக அபயஹஸ்தத்தினால் ஸூசிப்பிக்கப்பட்ட விஷயத்தைப் புன்முறுவல் கொண்ட திருமுக மண்டலமானது ஸந்தேஹமற வியாக்யானம் செய்வது போன்றுளதாம். இப்படிப்பட்ட நிலைமையோடே ஸேவைஸாதிக்கின்ற அழகிய மணவாளப் பெருமாள்'' "யோகக்ஷேமம் வஹாம்யஹம்'' என்று கீதையில் வாயோலைசெய்து கொடுத்தபடியே அடியேனுடைய யோகக்ஷேம நிர்வாஹகராக ஆகவேணுமென்றதாயிற்று.

இத்யூசிஷி என்ற பாடம் பிழை ; இத்யூசுஷி, என்று ஓதுக. ஊசிவாந் என்பது ப்ரதமை; ஊசுஷி என்பது ஸப்தமி.

ஸ்ரீரங்கஸர்வம்ஸஹ: = ஸர்வம்ஸஹரென்றது ஸர்வலோக நிர்வாஹகரென்றபடி; ஸ்ரீரங்கத்தி லெழுந்தருளியிருக்கும் ஸர்வலோக துரந்தரரான பெருமாள் என்கை. அன்றியே, 'ஸர்வம்ஸஹா' என்று பூமிக்குப்பெயர்; திருவரங்கத்தை க்ஷேத்ரமாகவுடையவர் என்றுகவுமாம். அப்போது பஹுவ்ரீஹிஸமாஸம். ... ... (70)

अङ्गैरहंप्रथमिकाचरितात्मदानैरामोदमाननवयौवनसावलेपैः ।
हे ! पारिजातमिव नूतनतायमानशाखाशतं (हृदि दधी) कथमधीमहि रङ्गधुर्यम् ॥७१॥

அங்கைரஹம்ப்ரதமிகாசரிதாத்மதாநை:
ஆமோதமாநநவயௌவநஸாவலேபை:,
ஹை பாரிஜாதமிவ நூதநதாயமாந
சாகாசதம் ஹ்ருதி ததீமஹி (கதமதீமஹி) ரங்கதுர்யம். 71

| | | | |
|---|---|---|---|
| அஹம்ப்ரதமிகா ஆசரித ஆத்ம தாநை: | (அநுபவவிஷயமாவதற்கு) 'நான் முன்னே நான் முன்னே'யென்று முற்பட்டு வந்து தம்மை அநுபவிக்கக் கொடுக்கின்றவைகளும் | ஆமோதமாந நவ யௌவந ஸாவலேபை: | பரிமளிக்கின்ற புதிய யௌவனத்தினால் செருக்குக் கொண்டவைகளுமான |
| | | அங்கை: | அவயவங்களினால் |

| | | | |
|---|---|---|---|
| நூதந தாயமாந சாகாசதம் | புதிசு புதிசாகச் செழித்து வளர்கின்ற பல கிளைகளை யுடைத்தான | ரங்கநர்யம் | ஸ்ரீரங்கநாதனை |
| | | ஹ்ருதி | நெஞ்சிலே |
| | | ததீமஹி ? | தாங்கக்கடவோமோ? |
| பாரிஜாதம் இவ (ஸ்திதம்) | பாரிஜாத வ்ருக்ஷம் போன்றுள்ள | | [எப்படி தாங்குவது] |
| | | ஹை | கஷ்டம்! |

* * * இந்த ச்லோகத்தின் ஈற்றடியில் ''கதமதீமஹி'' என்றும் *ஹ்ருதி ததீமஹி* என்றும் இரண்டுவகையான பாடங்கள் வழங்கிவருகின்றன, வ்யாகரண சாஸ்த்ரப்படி * அதியீமஹி* என்றுவது அதீமஹே என்றுவது ரூபம் நிஷ்பந்நமாகுமேயல்லது அதீமஹி என்று ரூபம் நிஷ்பந்நமாக வழியில்லை யென்கிற அபிப்ராயம் பல வித்வான்களுடையது; இந்த ஸ்தவத்தின் முதல்ச்லோகத்தின் உரையிலே அடியேன் விமர்சித்து எழுதியுள்ள வியாகரணவிசாரத்தினால் 'அதீமஹி' என்கிற ரூபநிஷ்பத்தி ஒருவாறு பொருந்தலாம் என்று காட்டியுள்ளதனால் இங்கு கதமதீமஹி என்னும்பாடமும் இருக்கலாமெனக. ப்ரக்ருதத்தில் அர்த்தஸ்வாரஸ்யம் அதிசயித்திருப்பதும் இப்பாடத்திலே யாகையாலே இதுவே முக்யபாடமாக இருக்கத் தகுமென்பதும் விவக்ஷிதம். பூர்வவ்யாக்யாதாக்கள் கொண்டபாடமும் இதுவே. சில ஏட்டுப்பிரதிகளில் ஹ்ருதி ததீமஹி என்கிற பாடமும் காண்கிறது. நிற்க.

அழகிய மணவாளனுடைய யௌவநச் செருக்குக் கொண்ட திவ்யாவயவங்கள் என்னைக்கொள், என்னைக்கொள்' என்று ஒவ்வொன்றும் முற்பட்டு மேல்விழுந்து அநுபவிப்பிக்கவே, பெருங்காற்று மழையிலே கனிகள் ஒருங்கே உதிர்ந்தால் எதையெடுத்து நுகர்வது! என்று தடுமாறிநிற்குமாபோலே தமக்குத் தடுமாற்றம் நேர்ந்தமை இந்த ச்லோகத்தில் விளங்கும்.

த்ருதீயாவிபக்திக்கு அபேதம் அர்த்தமாகக்.கொள்வதுண்டு; 'தாந்யேந தநவாந்' இத்யாதிகளிற் காணலாம். அப்படியே இங்கும் 'அங்கைஃ' என்ற த்ருதீயைக்கு அபேதம் பொருளாகும். 'என்னை முன்னே அநுபவி' என்னை முன்னே அநுபவி' என்று முற்பட்டு மேல்விழுந்துவருகிற திவ்யாவயவங்களாகிற புதிய பரந்தசாகைகளையுடைத்தான ஸ்ரீரங்கநாத பாரிஜாதத்தை எப்படி அநுபவிப்பேன் என்கிறார். ''தோள்கண்டார் தோளே கண்டார்......தாள்கண்டார் தாளேகண்டார்'' என்னுமாபோலே ஒவ்வோரவயவந்தன்னிலே அழுந்திவிடலாயிருக்கு மத்தனையொழிய ஸகலாவயவங்களிலும் ஊன்றிப் பூர்ணநுபவம்பண்ணுகை அரிதுஎன்று தெரிவித்தபடியாம். அங்ஙனுகில் ஸர்வாவயவங்களையும் க்ரமேண இவர் அநுபவித்துப் பேசுகிறாரே, அஃது எப்படி? என்று கேட்போர், மேலே ''ஏகைகஸ்மிந் பரமவயவே*'' என்ற (89) ச்லோகம் கண்டு தெரிக.

''நூதநதாயமாந......'' என்றவிடத்து, 'நூதநதா—புதிதாயிருக்கையை, அயமாந—அடைகின்ற' என்று சிலர் உரைப்பது பொருந்தாது. 'தாய்—ஸந்தாநே என்றதாதுவில் நிஷ்பந்நமாகின்ற தாயமாந' பதம் இங்கு உணரத்தக்கது.

ஹ்ருதி ததீமஹி' என்றபாடத்தில் காகுஸ்வரமாகக் கொண்டு உரைத்தால் பொருந்தும்' ஹை—விஷாதஸூசகமான அவ்யயம். ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிக்கக் கிடைக்கவில்லையே! என்கிற வருத்தம். ... ... (71)

आलोका हृदयालवो रसवशादीशानमीषत्स्मितं प्रच्छायानि वचांसि पद्मनिलयाचेतश्शरव्यं वपुः ।
चक्षुष्मन्ति गतागतानि त इमे श्रीरङ्गशृङ्गार ! ते भावा यौवनगन्धिनः किमपरं सिञ्चन्ति चेतांसि नः ॥७२॥

ஆலோகா ஹ்ருதயாலவோ ரஸவசாதீசாநமீஷத்ஸ்மிதம்,
ப்ரச்சாயாநி வசாம்ஸி பத்மநிலயாசேதச்சரவ்யம் வபுः.
சக்ஷுஷ்மந்தி கதாகதாநி த இமே ஸ்ரீரங்கச்ருங்கார தே
பாவா யௌவநகந்திநः கிமபரம் ஸிஞ்சந்தி சேதாம்ஸி நः,— 72

| | |
|---|---|
| ஹே ஸ்ரீரங்கச்ருங்கார | கோயிலில் ச்ருங்கார ரஸமே வடிவெடுத்து நிற்பது போன்றுள்ள பெருமானே! |
| தே | உன்னுடைய |
| ஆலோகா: | கடாக்ஷங்கள் |
| ஹ்ருதயாளவ: | (ஆச்ரிதர்களிடத்தில்) அன்போடு கூடியவை; |
| ஈஷத் ஸ்மிதம் | மந்த ஹாஸமானது |
| ரஸவசாத் | ப்ரணயரஸத்தினால |
| ஈசாநம் | (அனைவரையும்) வசப்படுத்திக் கொள்ளுமது; |
| வசாம்ஸி | வாய்மொழிகள் |
| ப்ரச்சாயாநி | (ஸம்ஸார தாபாதுரர்களுக்கு) நிழல் தருவன: |
| வபு: | திருமேனியானது |
| பத்மநிலயா சேதஸ் சரவ்யம் | பங்கயத்தாளான பிராட்டியின் திருவுள்ளத்திற்கு இலக்காயிருக்குமது; |
| கத ஆகதாநி | (திருவீதிப் புறப்பாடுகளில்) எழுந்தருள்வதும் மீண்டெழுந்தருள்வதும் |
| சக்ஷுஷ்மந்தி | கண்ணுக்கினிமையானவை; |
| கிம் அபரம் | வேறு என்ன ? |
| தே இமே | ஆக இப்படிப்பட்ட |
| யௌவந கந்திந: பாவா: | யௌவந ஸூசகங்களான விஷயங்கள் |
| ந: | அடியோங்களுடைய |
| சேதாம்ஸி | நெஞ்சுகளை |
| விஞ்சந்தி | குளிரச்செய்கின்றன. |

* * *—வாரீர் அழகிய மணவாளப்பெருமாள் ! தேவரீருடைய யௌவனைகாந்திகங்களான ஸ்வபாவவிசேஷங்கள் அடியோங்களுடைய நெஞ்சைக் குளிரச்செய்கின்றன வென்கிறூர், தேவரீருடைய திருக்கண்ணோக்கங்கள் ஸாமாந்யமாக இல்லை, விசேஷாபிப்ராயங்களோடு கூடியிருக்கின்றன; விரஸமான பெருஞ்சிரிப்பன்றிக்கே ஸரஸமான புன்சிரிப்பானது கல்நெஞ்சரையும் வசப்படுத்திக்கொள்ளவற்றாயிரா நின்றது ; அபிமதஜந ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து சோதிவாய் திறந்தருளிச் செய்யும் வார்த்தைகள் ஸம்ஸாரதாபதப்தர்களுக்கு நிழல்கொடுத்து இளைப்பாற்றுவனவாயுள்ளன; திருமேனியானது பங்கயச் செல்வியான பெரியபிராட்டியார் நெஞ்சைக் கொள்ளைகொண்டிராநின்றது; ["அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கை யுறைமார்பா" என்கிறபடியே தாமரைப்பூ அடிக்கொதிக்கிறதென்று அதனை விட்டு இங்கேவந்து அணையும்படியாக நிரதிசயபோக்யமா யுள்ளதென்கை.] புறப்பாடுகளில் திருவீதியலங்கரிப்பதும் மீண்டும் கோயிலுக்கு எழுந்தருள்வதுமான நடைகள் கண்ணைக் கவர்வன ; இப்படி வகையிட்டுச் சொல்லுவதென் ? தேவரீருடைய யௌவனச் செருக்குக்கு உள்ளீடான ஸ்வபாவவிசேஷங்களெல்லாம் அடியோங்களின் ஹ்ருதயத்தை யுருக்குகின்றன—என்றூராயிற்று,

ஸ்ரீரங்கச்ருங்கார ! என்ற ஸம்போதநம் இந்த ச்லோகத்தின் பொருளுக்கு மிக்க பொருத்த முடையது. ச்ருங்காரரஸமே வடிவெடுத்து நிற்பது போன்றுள்ள நம்பெருமாளே! என்கை. இந்த ச்லோகத்திலுள்ள பதப்ரயோகங்களெல்லாம் பரம கம்பீரமாக அமைந்து அழகு காண்மின். எம்பெருமான் திருக்கோலத்தை ஸேவிக்கும்போது அஸ்மதாதிகள் அநுஸந்திக்க வேண்டிய ச்லோகங்களுள் இது முதன்மை பெறும். (72)

आयत्किरीटमलिकोल्लसदूर्ध्वपुण्ड्रमाकर्णलोचनमनङ्कुशकर्णपाशम् ।
उत्फुल्लवक्षसमुदायुधबाहुमर्हत्ग्रीविं च रङ्गपतिमब्जपदं भजामः ॥७३॥

ஆயத்கிரீடமளிகோல்லஸதூர்த்வபுண்ட்ரம்
ஆகர்ணலோசநமநங்குசகர்ணபாசம்,
உத்புல்லவக்ஷஸமுதாயுதபாஹுமர்ஹத்-
க்ரீவிஞ்ச ரங்கபதிமப்ஜபதம் பஜாம:. 73

| | |
|---|---|
| ஆயத் கிரீடம் | நீண்ட திரு வபிஷேகத்தை யுடையவரும் |
| அளிக உல்லஸத் ஊர்த்வ புண்ட்ரம் | திருநெற்றியில் விளங்குகின்ற ஊர்த்வ புண்ட்ரத்தை யுடையவரும் |
| ஆகர்ண லோசநம் | திருச்செவியளவும் நீண்ட திருக்கண்களை யுடையவரும் |
| அநங்குச கர்ண பாசம் | தட்டுத் தடங்கலற்ற சிறந்த திருச்செவிகளை யுடையவரும் |
| உத்புல்ல வக்ஷஸம் | விசாலமான திருமார்பை யுடையவரும் |
| உத் ஆயுத பாஹூம் | திவ்யாயுதங்களைக் கொண்ட திருக்கைகளை யுடையவரும் |
| அர்ஹத் நீவிம் | ஏற்றிருக்கின்ற வஸ்த்ர பந்தனத்தை யுடையவரும் |
| அப்ஜ பதம் ச | தாமரைபோன்ற திருவடிகளை யுடையவருமான |
| ரங்க பதிம் | அழகியமணவாளப் பெருமாளை |
| பஜாம: | ஸேவிக்கிறோம். |

* * *—திருமுடிதொடங்கித் திருவடியீறாக ஸங்க்ரஹேண அநுபவித்துப் பேசும் ச்லோகமிது. "முடிச்சோதியாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்னும் படியாய் *கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியும், திருநெற்றியில் விளங்குகின்ற திவ்யோர்த்வபுண்ட்ரமும், திருச்செவிமடல்களளவும் நீண்டு புடைபரந்து விளங்குகின்ற திருக்கண்களும், அத்திருக்கண்கள்போலே ஒருவரம்பிலே நிற்க வேண்டாமல் தடையின்றிப் பரந்து விளங்குகின்ற திருச்செவிகளும், (மார்பில்) கோலமாமணியாரமும் முத்துத் தாமமும் குருமாமணிப்பூணும் குலாவித் திகழ்வதைப் பார்த்தால் அழகியதொரு பொழில் பூத்துக்கிடக்கின்றதோ! என்னலாம்படியுள்ள திருமார்பும், "அன்னே! ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன்", என்று மதிமயக்கவல்ல திவ்யாயு தாழ்வார்களைக் கொண்ட திருக்கைகளும், மிகப்பொருத்தமான திருப்பரிவட்டச்சாத்தும், செந்தாமரைப் பூப்போன்ற திருவடிகளுமான திவ்யாவயவாதி சோபையை யநுபவித்துப் பேசினாராயிற்று.

அநங்குசகர்ணபாசம் = கர்ணபாசமென்றது—சிறந்த காது என்றபடி. கண்களுக்கு அளவு சொல்லும்போது கர்ணாந்தவிச்ராந்த மென்று சொல்லப்படுவதால் கண்களின் பரப்பு ஓரளவோடு கூடியதாயிருக்கும்; திருச்செவிகளுக்கு அங்ஙனே ஒருவரம்பு குறிக்கவேண்டியதில்லை யென்பது 'அநங்குச' என்னும் விசேஷணத்தின் கருத்து. (73)

अब्जन्यस्तपदाब्जमञ्चितकटीसंवादिकौशेयकं किञ्चित्ताण्डवगन्धिसंहननकं निर्व्याजमन्दस्मितम्।
चूडाचुम्बिमुखाम्बुजं निजभुजाविश्रान्तदिव्यायुधं श्रीरङ्गे शरदश्शतं तत इतः पश्येम लक्ष्मीसखम् ॥७४॥

அப்ஜந்யஸ்தபதாப்ஜமஞ்சிதகடீஸம்வாதிகௌசேயகம்,
கிஞ்சித்தாண்டவகந்திஸம்ஹநநகம் நிர்வ்யாஜமந்தஸ்மிதம்,
சூடாசும்பிமுகாம்புஜம் நிஜபுஜாவிச்ராந்ததிவ்யாயுதம்,
ஸ்ரீரங்கே சரதச் சதம் ததஇதஃ பச்யேம லக்ஷ்மீஸகம். 74

| | |
|---|---|
| அப்ஜ ந்யஸ்த பதாப்ஜம் | ஆஸனபத்மத்தி லெழுந்தின திருவடித்தாமரைகளை யுடையவரும் |
| அஞ்சித கடீ ஸம்வாதி கௌசேயகம் | சிறந்த திருவரைக்குப் பாங்கான பட்டுத் திருப்பரிவட்டத்தை யுடையவரும் |
| கிஞ்சித் தாண்டவ கந்தி ஸம்ஹநநகம் | சிறிது நர்த்தனஞ் செய்வது போல் விளங்குகின்ற திருமேனியை யுடையவரும் |
| நிர்வ்யாஜ மந்தஸ்மிதம் | இயற்கையான புன்முறுவலை யுடையவரும் |
| சூடா சும்பி முக அம்புஜம் | திருவபிஷேகத்தைத் தழுவியிருக்கின்ற முககமலத்தை யுடையவரும் |
| நிஜ புஜா விச்ராந்த திவ்ய ஆயுதம் | தம்திருக்கையில் இளைப்பாறுகின்ற திவ்யாயுதங்களை யுடையவருமான |
| லக்ஷ்மீஸகம் | நம்பெருமாளை |
| ஸ்ரீரங்கே | திருவரங்கத்தில் |
| சதம் சரத: | இன்னமொரு நூற்றாண்டளவும் |
| தத: இத: | அங்குமிங்கும் |
| பச்யேம | ஸேவிக்கக்கடவோம். |

Released by Maran's Dog ,Toronto, Canada



* * *—இந்தச்லோகமும் கீழ்ச்லோகம்போலவே நம்பெருமாளுடைய திவ்யாவயவாதி ஸந்நிவேசங்களை யநுபவித்து விலக்ஷணமாகப் பேசுவதாம். திவ்யமங்களவிக்ரஹத்தில் திருவடிகளுக்கு ஆதாரமாயுள்ள பீடம் ஆஸநபத்ம மெனப்படும்; அதில் அழுத்தின திருவடித் தாமரைகளும், திருவரைபூத்தாற் போன்றுள்ள திருப்பரிவட்டமும், அபிமதஜநதர்சநாநந்த வேகத்தாலே கொஞ்சம் கூத்தாடுவதுபோல் விளங்குகின்ற திருமேனியும், செயற்கையாகவன்றிக்கே இயற்கையாகவே யுள்ள புன்முறுவலும், திருவபிஷேகத்தோடணைந்த திருமுகமண்டலமும், விரோதிநிரஸநங்கள் குறையறச் செய்து தலைக்கட்டுகையாலே வியாபாரமற்று இளைப்பாறு நிற்கும் திவ்யாயுதங்களைக் கொண்ட திருக்கைகளுமான அழகையநுபவித்து, இங்ஙனே பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பல்கோடி நூறுயிரமும் நித்யாநுபவம் பண்ணப் பெறவேணுமென்று ஆசம்ஸித்தாராயிற்று.

" * வ்ருக்ஷே வ்ருக்ஷேச பச்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம் * என்ற மாரீசனுக்குப் போலே எங்குப் பார்த்தாலும் இந்த திவ்ய ஸேவையேயாகவேணு மென்பது ததிதஃ பச்யேம' என்பதன் உள்ளுறை. ... .... (74)

अग्रे तार्क्ष्येण पश्चादहिपतिशयनेनात्मना पार्श्वयोश्च श्रीभूमिभ्यामतृप्त्या नयनचुलकैस्सेव्यमानामृतौघम् ।
वक्त्रेणावि:स्मितेन स्फुरदभयगदाशङ्खचक्रैर्भुजाग्रैर्विश्वस्मै तिष्ठमानं शरणमशरणा रङ्गराजं भजामः ॥७५॥

அக்ரே தார்க்ஷ்யேண பச்சாதஹிபதிசயநேநாத்மநா பார்ச்வயோச்ச,
ஸ்ரீபூமிப்யாமத்ருப்த்யா நயநசுலகைஸ் ஸேவ்யமாநாம்ருதௌகம்,
வக்த்ரேணாவிஃ ஸ்மிதேந ஸ்புரதபயகதாசங்கசக்ரைர் புஜாக்ரைஃ
விச்வஸ்மை திஷ்டமாநம் சரணமசரணா ரங்கராஜம் பஜாமஃ, 75

| | |
|---|---|
| அக்ரே | திருமுன்பே |
| தார்க்ஷ்யேண | பெரிய திருவடியாலும் |
| பச்சாத் | பின்புறத்தில் |
| அஹிபதி சயநேந ஆத்மநா | சேஷசாயியான தம்மாலும் |
| பார்ச்வயோஃ | இரண்டருகும் |
| ஸ்ரீ பூமிப்யாம்ச | ஸ்ரீதேவி பூதேவிகளாலும் |
| அத்ருப்த்யா | பர்யாப்தி யின்றிக்கே |
| நயந சுலகைஃ ஸேவ்யமாந அம்ருத ஓகம் | (ஸௌந்தர்யமாகிற) அமுத வெள்ளத்தைக் கண்ணாரப் பருகப்பெற்றவராய், |
| ஆவிஃ ஸ்மிதேந | புன்முறுவல் தோற்றப் பெற்ற |
| வக்த்ரேண | திருமுகமண்டலத்தினாலும் |
| ஸ்புரத் அபய கதா சங்க சக்ரைஃ | அபய முத்ரையும் கதையும் சங்கமும் சக்கரமும் விளங்கப்பெற்ற |
| புஜாக்ரைஃ | புஜாக்ரங்களினாலும் |
| விச்வஸ்மை திஷ்டமாநம் | எல்லார்க்கும் தம் திருவுள்ளத்தை வெளியிடுகின்றவரான |
| ரங்கராஜம் | நம்பெருமாளை |
| அசரணாஃ வயம் | புகலற்ற நாம் |
| சரணம் பஜாமஃ | சரணமடைகின்றோம். |

Released by Maran's Dog ,Toronto, Canada

* * *—உத்ஸவமூர்த்தியாகிய நம்பெருமாளை மூலமூர்த்தியான பெரியபெருமாள் பின்புறத்திலும், பெரியதிருவடி முன்புறத்திலும் திருமடந்தை மண்மடந்தைகள் இரண்டருகு மிருந்துகொண்டு எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்திபிறப்பதே யில்லையென்கிறார் பூர்வார்த்தத்தால். எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹாநுபவம் பிறர்க்கு எப்படி ஸ்ப்ருஹணீயமோ அப்படி ஸ்வாத்மாவுக்கும் ஸ்ப்ருஹணீயமாயிருக்கு மென்பது விளங்க 'அஹிபதிசயநேநாத்மநா பச்சாத்' எனப்பட்டது. நான்கு திசைகளிலும் நால்வர் இருந்துகொண்டு கண்ணாரப்பருகுமமுதமாம் நம்பெருமாளுடைய ஸௌந்தர்யமாகிற திவ்யாம்ருதம். " * ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி * " என்றாப்போலன்றியே "அத்ருப்த்யா ஸேவ்யமாநாம்ருதௌகம்" என்னும்படியுள்ளது இவ்வம்ருதவைலக்ஷண்யம். * ந ததர்ப்ப ஸமாயாந்தம் பச்யமாநோ நராதிபஃ * என்று சக்ரவர்த்தி பெருமாளைக் கண்டு த்ருப்திபெறவேயில்லை யென்றது காண்க.

Released by Maran's Dog ,Toronto, Canada

விச்வஸ்மை திஷ்டமாநம்=நிற்பதனாலே தன்கருத்தை உலகத்தார்க்கு உணர்த்துகிறானென்றபடி. அபயமுத்ரையையும் திவ்யாயுதங்களையும் கொண்ட திருக்கைகளாலும் புன்முறுவல் கொண்ட திருமுகமண்டலத்தாலும் ஜநங்களுக்குத்தன் திருவுள்ளத்தைத் தெரிவித்தருள்கிறானும்—'நீங்கள் அஞ்சவேண்டா ; உங்களைக் காத்தருள்வதற்கன்றோ நான் உபயகாவேரீமத்யத்தில் வந்து படுகாடுகிடக்கிறேன்' என்று தெரிவிப்பவன் போன்றுளனும். ... ... ... (75)

आर्तापाश्रयमर्थिकल्पकमसह्यागस्करक्ष्मातलं सद्यस्संश्रितकामधेनुमपियत्सर्वस्वमस्मद्धनम् ।
श्रीरङ्गेश्वरमाश्रयेम कमलाचक्षुर्महीजीवितं श्रीरङ्गे स सुखाकरोतु सुचिरं दास्यं च धत्तां मयि ॥७६॥

ஆர்த்தாபாச்ரயமர்த்திகல்பகமஸஹ்யாகஸ்கரக்ஷ்மாதலம்,
ஸத்யஸ் ஸம்ச்ரிதகாமதேநுமபியத்ஸர்வஸ்வமஸ்மத்தநம்,
ஸ்ரீரங்கேச்வரமாச்ரயேம கமலாசக்ஷுர் மஹீஜீவிதம்
ஸ்ரீரங்கே ஸ ஸுகாகரோது ஸுசிரம் தாஸ்யம் ச தத்தாம் மயி. 76

| | |
|---|---|
| ஆர்த்த அபாச்ரயம் | ஆர்த்தர்களுக்குப் புகலிடமாயும் |
| அர்த்தி கல்பகம் | அர்த்திகளுக்குக் கல்பவ்ருக்ஷமாயும் |
| அஸஹ்ய ஆகஸ்கர க்ஷ்மா தலம் | அஸஹ்யாபராதிகள் விஷயத்திலே பொறுமையுள்ளவராயும் |
| ஸத்ய: ஸம்ச்ரித காமதேநும் | அன்றேவந்தடைந்தவர்கட்கும் காமதேநுபோலே வேண்டியவற்றைக் கொடுப்பவராயும் |
| அபியத் ஸர்வஸ்வம் | ஆழ்வார்கள் போல்வார்க்கு 'எல்லாங் கண்ணன்' என்னும்படி ஸர்வஸ்வமாயிருப்பவராயும் |
| அஸ்மத் தநம் | எமது செல்வமாயும் |
| கமலாசக்ஷு: | பிராட்டியார்க்குக் கண்ணுயும் |
| மஹீ ஜீவிதம் | பூமிப்பிராட்டியின் பிராணனுயுமிருக்கிற |
| ஸ்ரீரங்கேச்வரம் | நம்பெருமாளை |
| ஆச்ரயேம | ஆச்ரயிப்போம்; |
| ஸ: | அந்த நம்பெருமாள் |
| ஸுசிரம் | நெடுநாளளவும் |
| ஸ்ரீரங்கே | திருவரங்கத்தில் |
| ஸுகாகரோது | (அடியேனை) சுகப்படுத்தவேணும், |
| மயி | அடியேனிடத்தில் |
| தாஸ்யம் ச | தாஸவ்ருத்தியையும் |
| தத்தாம் | அருளவேணும். |

* * *—ஆகக் கீழ்ப் பதின்மூன்று ச்லோகங்களால் அழகிய மணவாளனை உபாயத்வேந அநுஸந்தித்து, அவனது திருவடிகளின் கீழ் குற்றேவல் செய்வதே உபேயமாக அநுஸந்தேயமென்னுமிடத்தை இந்த ச்லோகத்தால் வெளியிடுகிறார். "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டு நாம்" என்கிற கைங்கர்ய ப்ரார்த்தநையே புருஷார்த்தமென்று காட்டுகிறபடி.

பகவத்கீதையில் 'ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப, சதுர்விதா பஜந்தே * என்று நால்வகையதிகாரிகள் எம்பெருமானைப் பணிகின்றவர்களாகச் சொல்லப்பட்டுள்ளனர்—ஏற்கெனவே ஐச்வரியமிருந்து அது மீண்டும் வேண்டுமென்று ஆச்ரயிப்பவர்; புதிதாக ஐச்வர்யம்வேண்டி ஆச்ரயிப்பவர் ; ஆத்மாநுபவமாகிற கைவல்யமோக்ஷத்தை விரும்பி ஆச்ரயிப்பவர் ; பரமபுருஷார்த்தமான நித்யகைங்கர்யத்தை விரும்பி ஆச்ரயிப்பவர் ; ஆக நான்குவகைப்பட்ட அதிகாரிகள் அங்குச் சொல்லப்பட்டனர்; அந்த நால்வகையதிகாரிகளுக்கும் ஸ்ரீரங்கநாதன் அபேக்ஷித பலங்களை அளித்தருள்பவனென்கிறாரிதில்.

ஆர்த்தாபாச்ரயம்=இழந்த ஐச்வரியத்தை மீண்டும் பெறவிரும்புமவர்களான ஆர்த்தர்களுக்குப் புகலிடமாயுள்ளவரென்கை. அர்த்திகல்பகம்=அபூர்வமான ஐச்வரியத்தை விரும்புமவர்களான அர்த்திகளுக்குக் கல்பவ்ருக்ஷம் போன்று அதனைக்குறையறக் கொடுத்தருள்பவரென்கை. அஸஹ்யாகஸ்கரக்ஷ்மாதலம்=பரமபோக்யனான தன்னிடத்தில்

68. எண்ணெய்க்குடத்தையுருட்டி இளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக் கண்ணைப் புரட்டி விழித்துக் கழைகண்டு செய்யும் பிரான். ... (2-4-5)

69. கன்றினை வாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து பின்தொடர்ந் தோடியோர்பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினான். ... (2-4-7)

70. பேயின் முலையுண்டபிள்ளை, மாயச்சகடும் மருதுமிறுத்தவன். ... (2-5-2)

71. திண்ணக்கலத்துத்திரையுறிமேல் வைத்த வெண்ணெய் விழுங்கி விரையவுறங்கிடுமண்ணலமரர் பெருமான். ... (2-5-3)

72. பள்ளத்தில் மேயும் பறவையுருக்கொண்டு கள்ளவசுரன் வருவானைத் தான் கண்டு புள்ளிது வென்று பொதுக்கோ வாய்கீண்டிட்ட பிள்ளை. ... (2-5-4)

73. கற்றினம்மேய்த்துக் கனிக்கொருகன்றினைப் பற்றியெறிந்த பரமன் ... (2-5-5)

74. கிழக்கிற் குடிமன்னர் கேடிலாதாரையழிப்பான் நினைந்திட்டு அவ் வாழியதனால் விழிக்கு மளவிலே வேரறுத்தான். ... (2-5-6)

75. வேலிக்கோல் வெட்டி விளையாடு வில்லேந்தித் தாலிக் கொழுந்தைத் தடங் கழுத்திற்பூண்டு பீலித்தழையைப் பிணைத்துப் பிறகிட்டுக் காலிப்பின் போவான். ... (2-6-1)

76. கறுத்திட் டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான், பொறுத்திட் டெதிர் வந்த புள்ளின் வாய்கீண்டான், நெறித்த குழல்களை நீங்க முன் னோடிச் சிறுக்கன்று மேய்ப்பான். .... (2-6-3)

77. ஒன்றே யுரைப்பான் ஒருசொல்லே சொல்லுவான். பாரதங்கை யெறிந்தான். ... (2-6-4)

78. பாரதங்கைசெய்து பார்த்தற்குத் தேரொன்றை யூர்ந்தான். .... (2-6-4)

79. பாலப்பிராயத்தே பார்த்தற்கருள் செய்த கோலப்பிரான். .... (2-6-6)

80. தேனிலினிய பிரான். ... (2-7-1)

81. மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம் மிடம்புக்குக் கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்புதுகிலவைகீறி நிச்சலும் தீமைகள் செய்வான். ... (2-7-3)

82. புள்ளினைவாய் பிளந்திட்டான், பொருகரியின் கொம்பொசித்தான்..... (2-7-5)

83. கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக் கால்கொடுபாய்ந்தான், தெருவின் கண் தீமைகள் செய்து சிக்கென மல்லர்களோடு பொருது வருகின்றபொன். ... (2-7-6)

84. குடங்களெடுத்தேற விட்டுக் கூத்தாட வல்லவெங்கோ, மடங்கொள் மதிமுகத்தாரைமால் செய்யவல்ல வென்மைந்தன், ... (2-7-7)

85. சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லான் சாமாறவனை யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டான், ... (2-7-8)

86. கள்ளச் சகடும் மருதும் கலக்கழிய உதைசெய்த பிள்ளையரசு. ... (2-8-7)

87. கஞ்சன் கறுக்கொண்டு வஞ்சிப்பதற்கு விடுத்த கருநிறச் செம்மயிர்ப் பேயைப் பிடித்து முலையுண்ட பரமன். ...(2-8-6, 2-8-7)

88. கும்பக்களிறட்டகோ, கொடுங்கஞ்சன் நெஞ்சினில் கூற்று. ... (2-7-8)

89. வெண்ணெய் விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு அத னோசை கேட்கும் கண்ணபிரான், ... (2-9-1)

90. வளைதுகில் கைக்கொண்டு காற்றிற் கடியனாயோடி யகம்புக்கு மாற்ற மும் தாரான்! .... (2-10-1)

91. வண்டமர் பூங்குழலார் துகில்கைக்கொண்டு விண்டோய் மரத்தான். ... (2-10-2)

92. தடம்படு தாமரைப்பொய்கை கலக்கி விடம்படுநாகத்தை வால் பற்றியீர்த்துப் படம்படுபைந்தலை மேலெழப் பாய்ந்திட்டு உடம்பையசைத்தான். ... (2-10-3)

93. தேனுகனுவி செகுத்துப் பனங்கனி தானெறிந்திட்ட தடம் பெருந் தோளினால் வானவர்கோன்விட வந்த மழைதடுத்து ஆனிரை காத்தான். .... (2-10-4)

94. ஆய்ச்சியர்சேரி அளைதயிர் பாலுண்டு பேர்த்தவர் கண்டுபிடிக்கப் பிடியுண்டு வேய்த்தடந்தோளினார் வெண்ணெய கொள்மாட்டார் தங்காப்புண்டிருந்தான். .... (2-10-5)

95. தள்ளித்தளர்நடையிட் டிளம்பிள்ளையாய் உள்ளத்தினுள்ளே அவளையுற நோக்கிக் கள்ளத்தினால் வந்த பேய்ச்சி முலையுயிர் துள்ளச் சுவைத்தான். ... (2-10-6)

96. தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான் பொன் னேய் நெய்யொடு பாலமுதுண்டு ஒரு புள்ளுவன் பொய்யே தவழும் மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கை துஞ்ச வாய் வைத்த பிரான். ... (3-1-1)

97. வன்பாரச்சகடமிறச்சாடி வடக்கிலகம்புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்து வைத்த அன்பன். ... (3-1-2)

98. கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கிக் குடத்தயிர் சாய்த்துப் பருகிப்பொய்ம்மாயமருதான அசுரரைப்பொன்றுவித்தான். ... (3-1-3)

99. மையார் கண் மடவாய்ச்சியர் மக்களைமையன்மை செய்து அவர்பின் போய்க் கொய்யார் பூந்துகில் பற்றித்தனி நின்று குற்றம் பல பல செய்தான். ... (3-1-4)

100. முப்போதும் கடைந்தீண்டிய வெண்ணெயினோடு தயிரும் விழுங்கிக் கப்பாலாயர்கள் காவிற் கொணர்ந்த கலத்தொடு சாய்த்துப் பருகி மெய்ப்பாலுண்டழு பிள்ளைகள்போல விம்மி விம்மி யழு கின்றவப்பன். .... (3-1-5)

101. கரும்பார் நீள்வயல் காய்க்கதிர்ச் செந்நெலைக் கற்றாநிரை மண்டித் தின்ன விரும்பாக்கன்றொன்று கொண்டு விளங்கனி வீழ வெறிந்த பிரான். ... (3-1-6)

102. சுரும்பார் மென் குழல் கன்னியொருத்திக்குச் சூழ் வலை வைத்துத் திரியுமரம்பன். ... (3-1-6)

103. சுருட்டார் மென்குழல் கன்னியர் வந்து சுற்றுந்தொழ நின்றசோதி..... (3-1-7)

104. பிறர் மக்களை மையன்மை செய்து தோளாவிட்டவரோடு திளைத்துச் சொல்லப்படாதன செய்தான். .... (3-1-8)

105. காய்வார்க்கென்று முகப்பனவே செய்து கண்டார் கழறத்திரியு மாயன். .... (3-1-9)

106. தொத்தார் பூங்குழல் கன்னியொருத்தியைச் சோலைத்தடங்கொண்டு புக்கு முத்தார் கொங்கை புணர்ந்து இராமுழுதும் மூவேழு சென்ற பின் வந்தான். .... (3-1-10)

107. அஞ்சன வண்ணன், ஆயர் கோலக்கொழுந்து. .... (3-2-1)

108. பற்று மஞ்சள் பூசிப் பாவைமாரொடு பாடியில் சிற்றில் சிதைத் தெங்கும் தீமை செய்து திரிவான். ... (3-2-2)

109. நன்மணிமேகலை நங்கைமாரொடு நாள்தொறும் பொன் மணி மேனி புழுதியாடித் திரிவான். ... (3-2-3)

110. வண்ணக் கருங்குழல் மாதர்வந்தலர் தூற்றிடப் பண்ணிப்பல செய்து ஆய்ப்பாடியெங்கும் திரிவான். .... (3-2-4)

111. அவ்வவ்விடம் புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கணுக்கனுய்க் கொவ் வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்வான். ... (3-2-5)

112. மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய்ப் படிறு பல செய்து ஆய்ப்பாடி யெங்குந்திரிவான். ... (3-2-6)

113. வள்ளிநுடங்கிடைமாதர் வந்தலர்தூற்றிடத் துள்ளி விளையாடித் தோழரோடு திரிவான். ... (3-2-7)

114. பன்னிருதிங்கள் வயிற்றில் கொண்டவப்பாங்கினல் அசோதை யமு தூட்டி யெடுத்த இளஞ்சிங்கம். ... (3-2-8)

115. குடையும் செருப்பும் கொடாதே கடியவெங்கானிடைக் காலடி நோவக் கன்றின்பின் போக்கிய பிள்ளை. ... (3-2-9)

116. பேடைமயிற் சாயல் பின்னைமணாளன். .... (3-3-3)

117. பற்றார் நடுங்க முன் பாஞ்ச சன்னியத்தை வாய்வைத்த போரேறு .... (3-3-5)

118. பொய்கைபுக்கு நஞ்சுமிழ் நாகத்திேனாடு பிணங்கினன். ... (3-3-6)

119. கன்றினுருவாகி மேய்புலத்தே வந்த கள்ளவசுரன் தன்னைச் சென்று பிடித்துச் சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தான். ... (3-3-7)

120. கோவலரிந்திரற்குக் காட்டிய சோறும் கறியும் தயிரும் கலந்துட னுண்டான். ... (3-3-8)

121. அட்டுக்குவிசோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறும் அடங்கப் பொட்டத்துற்றி மாரிப்பகை புணர்த்த பொருமா கடல் வண்ணன். ... (3-5-1)

122. செப்பாடுடைய திருமாலவன். ... (3-5-6)

123. தடங்கை விரலைந்தும் மலர வைத்துத் தடவரை தாங்கு தாமோ தரன். ... (3-5-7)

124. வன்பேய் முலையுண்டதோர் வாயுடையன். ... (3-5-9)

125. வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாசுதேவன் மதுரை மன்னன் நந்தர் கோனிளவரசு கோவலர் குட்டன் கோவிந்தன். ... (3-6-3)

126. தேனுகன் பிலம்பன் காளியனென்னுந் தீப்பப் பூடுகளடங்கவுழக்கிக் கானகம்படி யுலாவி யுலாவிக் குழலூதின கருஞ்சிறுக்கன், ... (3-6-4)

127. செம்பெருந்தடங்கண்ணன் திரடோளன் தேவகி சிறுவன் தேவர்கள் சிங்கம், ... (3-6-6)

128. அருங்கலவுருவினயர் பெருமான். .... (3-6-10)

129. மல்லலரையட்டவன். ... (3-8-1)

130. சாடிறப்பாய்ந்த பெருமான், ... (3-8-6)

131. நந்தகோபன் மகன் கண்ணன். ... (38-8)

132. என்னுதன் தேவிக்கு அன்றின்பப்பூவீயாதாள் தன்னுதன் காணவே தண் பூமரத்தினை வன்னுதப் புள்ளால் வலியப்பறித்திட்ட என்னுதன். ... (3-9-1)

133. உருப்பிணி நங்கையத் தேரேற்றிக் கொண்டு விருப்புற்றங்கேக விரைந்தெதிர் வந்து செருக்குற்ருன் வீரஞ்சிதையத் தலையைச் சிரைத்திட்டான். ... (3-9-3)

134. பஞ்சவர்தூதனுய்ப் பாரதங்கை செய்து நஞ்சுமிழ் நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு அஞ்சப் பணத்தின்மேல் பாய்ந்திட்டருள் செய்த அஞ்சனவண்ணன். .... (3-9-5)

135. காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு அவன் நீண் முடியைங் திலும் நின்றுநடஞ் செய்து மீளவவனுக்கருள் செய்த வித்தகன். ... (3-9-7)

136. மாயச்சகடமுதைத்து மருதிறுத்து ஆயர்களோடு போய் ஆநிரை காத்து அணிவேயின் குழலூதி வித்தகனுய் நின்ற ஆயர்க ளேறு. ... (3-9-9)

137. கொலேயானைக் கொம்பு பறித்தான். .... (4-1-3)

138. ஆயர்மடமகள் பின்னைக்காகி அடல்விடையேழினையும் வீயப் பொருது வியர்த்து நின்ருன். ... (4-1-4)

139. வாரேறு கொங்கையுருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு தேரேற்றிச் சேனை நடுவுபோர் செய்தான். .... (4-1-5)

140. பொல்லா வடிவுடைப் பேய்ச்சிதுஞ்சப் புணர்முலை வாய்மடுக்க வல்லான் பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை எல்லாரும் சூழச்சிங்காசனத்தே யிருந்தான். ... (4-1-6)

141. வெள்ளைப் புரவிக்குரக்கு வெல் கொடித்தேர்மிசை முன்பு நின்று கள்ளப்படைத்துணையாகிப் பாரதம் கைசெய்தான். ... (4-1-7)

142. நாழிகை கூறிட்டுக் காத்து நின்ற அரசர்கள் தம்முகப்பே நாழிகை போகப்படை பொருதவன் தேவகிதன் சிறுவன், ஆழிகொண்டு அன்று இரவி மறைப்பச் சயத்திரதன் தலையைப் பாழிலுருளப் படைபொருதவன். .... (4-1-8)

143. ஆனுயர் கூடியமைத்த விழவை அமரர்தம் கோனுர்க் கொழியக் கோவர்த்தனத்துச் செய்தான். ... (4-2-4)

144. கஞ்சன் தனொருவாரண முயிருண்டவன். ... (4-2-5)

145. ஏவிற்றுச் செய்வான் ஏன்றெதிர்ந்து வந்த மல்லரைச் சாவத் தகர்த்த சாந்தணிதோள் சதுரன். .... (4-2-6)

146. மன்னர் மறுக மைத்துனன்மார்க்கொருதேரின்மேல் முன்னங்கு நின்று மோழை யெழுவித்தவன். .... (4-2-7)

147. எட்டுத் திசையுமெண்ணிறந்த பெருந்தேவிமார் விட்டுவிளங்க வீற்றிருந்த விமலன். .... (4-2-10)

148. உருப்பிணிநங்கைதன்னை மீட்பான் தொடர்ந்தோடிச் சென்ற வுருப்பனை யோட்டிக் கொண்டிட்டுறைத்திட்ட வுறைப்பன். .... (4-3-1)

| | | | |
|---|---|---|---|
| பணிசய— | அரவணைமேற் பள்ளி கொள்ளும் பெரிய பெருமாளாகிற | உததி— | ஸமுத்திரத்தில் நின்றும் |
| மரதகமணி— | மரதகப் பச்சையினுடைய | ப்ரசலித— | பரம்பின |
| கிரணகண: | காந்திஸமூஹமானது | லஹரிவத் | அலைகள்போன்ற |
| த்ருத— | (காய்ந்து) உருகின | அஹமஹமிகயா | முற்கோலி வந்து |
| கநகஜகிரி— | பொன்மலையோடு | இமம் ஜநம் | அடியேனை |
| பரிமிலத்— | கூடாநின்ற | ஸ்நபயதி | ஸ்நாநஞ் செய்விக்கின்றது; |
| | | தம: | அகவிருளை |
| | | அபஹரதி | அகற்றுகின்றது. |

* * *—"முடிவில்லதோரெழில் நீலமேனி ஐயோ! நிறைகொண்டதென்னெஞ்சினையே" என்ற திருப்பாணாழ்வார் பாசுரம் நினைவுக்கு வருகின்றது. அந்த நீலமேனியிலீடுபட்டு ஆச்சரியமாக அருளிச்செய்கிறார்.

"பணிசய மரதகமணி கிரணகண:" என்றதற்கு—அநந்தசாயியான பெரியபெருமாளுடைய மரதகப்பச்சையின் கிரண ஸமூஹமென்று சிலர் பொருள்கொள்வர்; அங்ஙனன்று; 'பணிசய ஏவ மரதகமணி:' என்றாய் அநந்தசாயியான பெரியபெருமாளாகிற மரதகமணியின் காந்திஸமூஹமென்று பொருளாகக்கடவது. "வள்ளலே மதுசூதனா என்மரதகமலையே!" என்றும் "விளக்கொளியை மரதகத்தை" என்றும் ஆழ்வார்கள் பலவிடங்களிலும் எம்பெருமானை மரதகமணியாகவே அருளிச்செய்வது காண்க. ஆக, ஸ்ரீரங்கநாதனுகிற மரதகமணியின் காந்திஸமூஹமானது எங்ஙனே சொல்லலாம்படியிருக்கிறதென்னில், [த்ருதகநகஜகிரி பரிமிளதுததி ப்ரசலித லஹரிவத்] உருகிப் பெருகுகின்றதொரு பொன்மலையோடு சேர்ந்த ஸமுத்ரத்தின் அலைவரிசையோ! என்னலாம்படியிருக்கின்றது. பொன்னரைநாண் முதலிய திவ்யாபரணங்கள், ஹிரண்யவர்ணையான பிராட்டி, பீதகவாடை ஆகிய இவற்றின் பொன்னிறமான ஒளியோடு கலசின நீலமேனி நிறத்திற்கு இவ்வுபமானம் மிகப்பொருந்தும். த்ருதகநகஜகிரிஸ்தாநத்தில் பீதாம்பராதிகளும், உததி ஸ்தாநத்தில் திவ்யமங்கள விக்ரஹமும் லஹரீ ஸ்தாநத்தில் கிரணஸமூஹமும் கொள்ளத்தக்கன. இப்படிப்பட்ட விலக்ஷணமான புகர்வெள்ளங்களானவை ஒன்றின் முன் ஒன்ருகப் போட்டிபோட்டுக்கொண்டு அடியேன்மீது பாய்கின்றன; அகவிருளையும் அகற்றுகின்றன என்ருராயிற்று. அதாவது இத்திவ்யமங்கள விக்ரஹ சோபையிலே அடியேனீடுபட்டு ஞானவொளி நிரம்பப்பெற்றேனென்கை. (86)

भोगीन्द्रनिःश्वसितसौरभवर्धितं श्रीनित्यानुषक्तपरमेश्वरभावगन्धि ।
सौरभ्यमाप्लुतदिशावधि रङ्गनेतुरानन्दसंपदि निमज्जयते मनांसि ॥८७॥

போகீந்த்ரநிச்வஸித ஸௌரபவர்த்திதம் ஸ்ரீ நித்யாநுஷக்தபரமேச்வரபாவகந்தி,
ஸௌரப்யமாப்லுததிசாவதி ரங்கநேதுः ஆநந்தஸம்பதி நிமஜ்ஜயதே மநாம்ஸி. (87)

| | | | |
|---|---|---|---|
| போகீந்த்ர— | (பள்ளி மெத்தையான) திருவனந்தாழ்வானுடைய | கந்தி | பரிமளித்துக் கொண்டிருப்பதாய் |
| நி:ச்வஸித— | மூச்சுக் காற்றினுடைய | ஆப்லுத திசா அவதி | திசைகளின் எல்லைகளை வியாபித்ததான |
| ஸௌரப— | பரிமளத்தாலே | ரங்கநேது: ஸௌரப்யம் | பெரிய பெருமாளுடைய பரிமளம் |
| வர்த்திதம் | வளர்த்தப்பட்டதாய், | மநாம்ஸி | (ஸேவிப்பவர்களது) உள்ளத்தை |
| ஸ்ரீ நித்ய அநுஷக்த— | பிராட்டியின் நித்ய ஸம்ச்லேஷத்தாலுண்டான | ஆநந்தஸம்பதி | ஆனந்தச் செல்வத்தில் |
| பரமேச்வரபாவ— | ஸர்வேச்வரத்வத்தினுல் | நிமஜ்ஜயதே | மூழ்குவிக்கின்றது. |

* * *—கீழ்ச்லோகத்தில் 'ஸ்நபயதி' என்று ஸ்நாநம் ப்ரஸ்துதமாயிற்று; ஸ்நாநமானதும் சாந்தணிதல் அபேக்ஷிதமாகுமிறே; பெரியபெருமாளுடைய திவ்யகந்தமே தம்

மைக் கமழ்விக்கின்ற தென்கிறாரிதில். காந்தி ஸமுத்ரத்திலே மூழ்கினமை சொன்னார் கீழ்ச்லோகத்தில். ஆநந்த ஸாகரத்தில் மூழ்குகின்றமை சொல்லுகிறாரிதில்.

*ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:* என்கிறபடியே எம்பெருமானுடைய திருமேனியானது பரிமளமயமாயிருக்கும், அப்படிப்பட்ட திருமேனியின் பரிமளத்திற்கு இன்னமும் புஷ்டி உண்டாகும் படியை இரண்டு விசேஷணங்களா லருளிச்செய்கிறார். [போகீந்த்ர நிஃச்வஸித ஸௌரபவர்த்திதம்] எம்பெருமானோடு பரமஸாம்யாபந்நனாயிருக்கும் திருவனந்தாழ்வானுடைய மூச்சுக்காற்றின் பரிமளம் சிறந்தது; அதுவும் இத்திருமேனி நறுமணத்தோடே கூடியதனால் அபிவ்ருத்தியாயிற்றென்கை. ஸ்ரீநித்யாநுஷக்த பரமேச்வராபாவகந்தி.] 'கந்தத்வாராம்' என்று ச்ருதிப்ரஸித்தையான பிராட்டியின் நித்யஸம்பந்தத்தினால் பரிமளப்ராசுர்ய முண்டாகச் சொல்லவேணுமோ? * அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா * இத்யாதிப்படியே பிராட்டியின் நித்யயோகத்தினால் எம்பெருமானுக்குப் பரமேச்வரத்வம் பொலிகின்றது; பரமேச்வரத்வப்ரயுக்தமான பரிமளம் எம்பெருமானுக்குள்ளது; பரமேச்வரத்வமில்லையாகில் பரிமளமில்லை; பிராட்டியின் நித்யயோகமில்லையாகில் பரமேச்வரத்வமில்லை என்கிற இம்முகத்தாலே பிராட்டியின் ஸம்பந்தம் பெரிய பெருமாளுடைய பரிமளத்திற்கு அபிவர்த்தகமாகிற தென்று திருவுள்ளம். [ஆப்லுததிசாவதி] பரப்ரஹ்மத்தினுடைய பரிமளமாகையாலே ஒரு மூலையடியே விச்ராந்தமாகாமல் திசைகள் தோறும் பரவுகின்றதென்கிறார். ... (87)

रङ्गभर्तुरपि लोचनचर्चां साहसावलिषु लेखयमानम् ।
पुष्पहास इति नाम दुहानं सौकुमार्यमतिवाङ्मनसं नः ॥८८॥

ரங்கபர்த்துரபி லோசநசர்ச்சாம் ஸாஹஸாவளிஷு லேகயமாநம்,
புஷ்பஹாஸ இதி நாம துஹாநம் ஸௌகுமார்யமதிவாங்மநஸம் நஃ. (88)

| | | | |
|---|---|---|---|
| லோசநசர்ச்சாம் அபி | (தன்மேல்) கண்கள் படுவதையும் | துஹாநம் | விளைவிப்பதுமான |
| ஸாஹஸ ஆவலிஷு | ஸாஹஸகாரியங்களின் வரிசைகளிலே | ரங்கபர்த்து: ஸௌகுமார்யம் | பெரிய பெருமாளது ஸௌகுமார்ய மானது |
| லேகயமாநம் | எழுதும்படி செய்யாநிற்பதும், | ந: அதிவாங்மநஸம் | நம்முடையவாக்குக்கும் சிந்தைக்கும் விஷய மன்று. |
| புஷ்பஹாஸ: இதி நாம | 'புஷ்பஹாஸ:' என்கிற திருநாமத்தை | | |

* * *—கீழ்ச்லோகத்தில் பெரியபெருமாளுடைய திருமேனியின் பரிமளத்தைப் பேசினார்; அதன் பிறகு அத்திருமேனியின் ஸௌகுமார்யத்தைப்பற்றிப் பேசநினைத்தார்; வாக்குக்கும் சிந்தைக்கும் விஷயமன்றிக்கே பரமவிலக்ஷணமாயிருக்கின்ற ஸௌகுமார்ய குணம் நெஞ்சால் நினைப்பரிதாயிருக்க அதனை எங்ஙனே வாய்கொண்டு பேசப்போகிறேனென்கிறார். பேசமுடியாதென்று சொல்லிக்கொண்டே சிறிது பேசிவிடுகிற வழக்கமுண்டே; அப்படியே சிறிது பேசுகிறார் [லோசநசர்ச்சாமபி ஸாஹஸாவளிஷு லேகயமாநம்] ஸேவார்த்திகள் கண்ணால் உறைக்கப்பார்த்தாலுங்கூட 'இப்படியும் ஒரு ஸாஹஸமான காரியம் செய்யலாகுமோ' என்ன வேண்டும்படியிருக்குமாம் ஸௌகுமார்யம். பார்ப்பதே ஸாஹஸம். கண்ணால் உற்றுநோக்கினால் திருமேனி வாடிப்போகும்படியான மார்த்தவமென்கை. *சேடீப்ருசா லோகிதை ரங்க மௌலே:* என்ற ஸ்ரீகுணரத்நகோச ஸூக்தியும் காண்க.

'ரங்கபர்த்து:' என்ற பதத்திற்கு ஸௌகுமார்யபதத்தில் அந்வயம். மூலத்திலுள்ளபடியே அவ்யவஹிதமாக அந்வயித்தும் பொருள் கொள்ளலாம். அதாவது பெரியபெருமாள் தாம் தம்திருக்கண்களாலே தம்மைநோக்கினாலும் வாடிப்போம்படியான மென்மை என்றபடி.

[புஷ்பஹாஸஇதி நாம துஹாநம்] ஸஹஸ்ரநாமத்தில் எம்பெருமானுக்குப் புஷ்பஹாஸ:' என்றொரு திருநாமமுண்டு. [புஷ்பஹாஸ: ப்ரஜாகர:] அந்தத் திருநாமமுண்டானதற்கு அடி இந்த ஸௌகுமார்யமே யென்கிறார். பூப்போலே ஸுகுமாரமான திருமேனியையுடையவனென்பது அதன் தேர்ந்தகருத்து. இப்படிப்பட்ட ஸௌகுமார்யமில்லாவிடில் அந்தத்திருநாமம் அந்வர்த்தமாகாதிறே. ... (88)

एकैकस्मिन्परमवयवेऽनन्तसौन्दर्यमग्नं सर्वं द्रक्ष्ये कथमिति मुधा मामथा मन्दचक्षुः ! ।
त्वां सौभ्रात्रव्यतिकरकरं रङ्गराजाङ्गकानां तल्लावण्यं परिणमयिता विश्वपारीणवृत्ति ॥८९॥

ஏகைகஸ்மிந் பரமவயவே஽நந்தஸௌந்தர்யமக்நம்
ஸர்வம் த்ரக்ஷ்யே கதமிதி முதா மா மதா மந்தசக்ஷு:,
த்வாம் ஸௌப்ராத்ரவ்யதிகரகரம் ரங்கராஜாங்ககாநாம்
தல்லாவண்யம் பரிணமயிதா விச்வபாரீணவ்ருத்தி. 89

| | |
|---|---|
| ஹே மந்தசக்ஷு: | ஓ மூடமான கண்ணே !, |
| ஏகைகஸ்மிந் | 'ஒவ்வொரு |
| அவயவே பரம் | அவயவத்திலே |
| அநந்த— | எல்லையற்றதான |
| ஸௌந்தர்ய— | அழகிலே |
| மக்நம் | முழுகியிருக்கிற |
| (அஹம்) | நான் |
| ஸர்வம் | எல்லா அவயவத்தையும் |
| கதம் | எப்படி |
| த்ரக்ஷ்யே | அநுபவிக்கப்போகிறேன் ?' |
| இதி | என்று |
| முதா | வீணாக |
| மா மதா: | சங்கியாதே ; |
| ரங்கராஜ அங்ககாநாம் | பெரிய பெருமாளுடைய அவயவங்களுக்கு |
| ஸௌப்ராத்ர வ்யதிகரகரம் | நட்பின்தொடர்பை விளைவிக்கின்ற |
| தத் லாவண்யம் | அந்த ஸமுதாயசோபையானது |
| த்வாம் | உன்னை |
| விச்வபாரீண வ்ருத்தி | எல்லா அவயவங்களையும் பூர்த்தியாக அநுபவித்தவளாக |
| பரிணமயிதா | நிறைவேற்றிவிடும். |

* * *—வடிவழகில் இரண்டுவகையுண்டு ; ஸௌந்தர்ய மென்பது ஒன்று, லாவண்யமென்பது ஒன்று. தனித்தனி ஒவ்வோரவயவத்தின் அழகு ஸௌந்தர்யமெனப்படும் ; எல்லா அவயவங்களினுடையவும் ஸமுதாயத்தில் தோன்று மழகு லாவண்யமெனப்படும். (இதற்கு நீரோட்டமென்றும் பெயருண்டு.) ஆக இவ்விரண்டுவகையான அழகும் பெரியபெருமாள் பக்கலிலே குறையற்ற தென்னுமிடத்தை ஒரு சமத்காரமாக அருளிச்செய்கிறாரிதில்.

பட்டர் தம்முடைய திருக்கண்களை விளித்து உபதேசிப்பதாக அமைந்தது இந்த ச்லோகம். கம்பராமாயணத்தில் (பாலகாண்டம் உலாவியற்படலம் 12.) "தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன, தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண்டாருமஃதே, வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்?, ஊழ்கொண்ட சமயத்தன்னானுருவு கண்டாரை யொத்தார்." என்று சொல்லப்பட்டுள்ளபடியே, எம்பெருமானுடைய ஓரவயவத்திலே கண்வைத்தால் மறுபடியும் கண்ணை அதில் நின்றும் பேர்த்து வேறோரவயவத்தில் செலுத்தப்போகாமல் ஒரொன்றிலேயே கண் பதிந்து போகும்படியிருக்கும். ஆகவே பெரிய பெருமாளுடைய எல்லா அவயவங்களையும் முழுக்க அநுபவிக்க வேணுமென்னும் விருப்பமுடைய தமது கண்கள் 'ஐயோ! ஸ்ரீரங்கநாதனுடைய ஒவ்வொரு அவயவத்தின் அழகே என்னைக்கொள்ளைகொண்டுபோகிறதே!, ஒன்றைவிட்டு வேறொன்றிலே செல்லமுடியவில்லையே! எல்லா அவயவங்களையும் நான் எப்படி அநுபவிப்பேன்?' என்று வியாகுலப்பட்டனவாகக் கொண்டு, அக்கண்களுக்குத் தேறுதல் கூறுகிறார்-கண்ணே! இப்படி நீ வியாகுலப்பட வேண்டா ; பெரிய பெருமாளுடைய ஒவ்வொரு அவயவமும் உன்னைத் தன்னிடத்து ஆழங்காற்படுத்திப் பக்கநோக்கறியவொட்டாமே செய்துவிடுமென்பது உண்மையே ;

ப்ரத்யங்க சோபை அப்படி செய்துவிட்டாலும் லாவண்யமென்கிற ஸமுதாய சோபையென்பதொன்றுண்டே, அது உன் நினைவைத் தலைக்கட்டிவைக்கும்; அது எல்லா அவயவங்களையும் தொடர்ந்ததொரு ஸூத்ரம் போன்றிருப்பதால் ஒரு அவயவத்தில் நின்றும் மற்றோரவயவத்திற்கு மெல்லமெல்ல உன்னைக்கொண்டுபோவதாகி க்ரமேண ஸகலாவயவங்களையும் பூர்ணமாக அநுபவிப்பிக்கும். ஆகையாலே ஒரு குறையுமிராது; இதனையறியாமல் மூடத்தனமாய் நீ ஏன் வருந்துகிறாய்? வருந்தாதே என்று தேற்றும் முகத்தால், தாம் அந்த லாவண்யத்தையே வழிகாட்டியாகக் கொண்டு பெரிய பெருமாளுடைய ஸர்வாவயவங்களையும் அநுபவிக்க இழிகின்றமையும் வெளியிட்டருளினாராயிற்று.

திருப்பாணாழ்வார் முதலானோர் அமலனாதிபிரான் முதலான திவ்யப்ரபந்தங்களில் பெரியபெருமாளுடைய ஒவ்வொரு அவயவத்திலும் தனித்தனி ஆழ்ந்து, போக்கவும் போகாத சிந்தையராயிருந்தும் ஒரு அவயவத்தையும் விடாதே எல்லா அவயவங்களையும் அநுபவித்துத் தீர்த்தது இந்த லாவண்யத்தை அண்டைகொண்டே போலும்.

[ஸௌப்ராத்ரவ்யதிகரகரம் லாவண்யம்] ஸஹோதரர்கள் பலரிருந்தால் அவர்கட்குப் பரஸ்பரம் பிணக்கமின்றியே ஸ்நேஹமேயிருந்தால் அது ஸௌப்ராத்ர மெனப்படும், இங்கு அவயவங்களை ப்ராதாக்களாகக் கொள்க; ஒவ்வொரு அவயவமும் 'என்னைவிட்டு அப்பால் நகராதே, என்னைவிட்டு அப்பால் செல்லாதே' என்று கண்ணைக் கொள்ளை கொள்வதனால் இவை பரஸ்பரம் ஸ்நேஹரஹிதமாய்ப் பிணக்கமுற்றிருந்தன; அந்தப் பிணக்கத்தை நீக்கி அன்பை வளர்த்ததாம் லாவண்யம். எல்லா அவயவங்களோடும் கலந்து பரிமாறப் பாங்குசெய்ததிறே. ... ... (89)

वपुर्मन्दारस्य प्रथमकुसुमोल्लाससमयः क्ष्मालक्ष्मीभृङ्गीसकलकरणोन्मादनमधु ।
विकासस्सौन्दर्यस्रजि रसिकताशीधुचुलको युवत्वं रङ्गेन्दोस्सुरभयति नित्यं सुभगताम् ॥९०॥

வபுர்மந்தாரஸ்ய ப்ரதமகுஸுமோல்லாஸஸமய:
க்ஷமாலக்ஷ்மீப்ருங்கீஸகலகரணோந்மாதநமது,
விகாஸஸ் ஸௌந்தர்யஸ்ரஜி ரஸிகதாசீதுசுலக:
யுவத்வம் ரங்கேந்தோஸ் ஸுரபயதி நித்யம் ஸுபகதாம், (90)

| | | | |
|---|---|---|---|
| வபு: மந்தாரஸ்ய | திருமேனியாகிற கல்பவ்ருக்ஷத்திற்கு | மது | தேன்போன்றதாயும், |
| ப்ரதமகுஸும உல்லாஸஸமய: | முதல்புஷ்பம் புஷ்பிக்கும் பருவமாயும், | ஸௌந்தர்யஸ்ரஜி | அழகாகிற பூமாலையிலே உண்டான |
| க்ஷமா— | பூமிப்பிராட்டியென்ன | விகாஸ: | விகாஸம் போன்றதாயும் |
| லக்ஷ்மீ— | திருமகளென்ன (இவர்களாகிற) | ரஸிகதா சீது சுலக: | ரஸிக்யமாகிற மதுவை அடைக்கிவைத்துக் கொண்டிருப்பதாயுமுள்ள |
| ப்ருங்கீ— | பேடை வண்டுகளுக்கு | ரங்கேந்தோ: நித்யம் யுவத்வம் | பெரியபெருமாளுடைய நித்ய யௌவனமானது |
| ஸகலகரண— | எல்லா இந்திரியங்களையும் | ஸுபகதாம் | ஸௌபாக்யத்தை |
| உந்மாதந— | உந்மத்தமாக்கவல்ல | ஸுரபயதி | பரிமளிப்பிக்கின்றது. |

* * *—பெரிய பெருமாளுடைய யௌவநாவஸ்தையை வருணிக்கிறார். புராண புருஷராயிருக்கிற பெருமாளுக்குத் திருமேனி தளர்ந்திருக்குமே, கீழ்ச்லோகத்திற் கூறியபடி ஸௌந்தர்ய லாவண்யங்கள் சிறந்திருக்கும்படி யெங்ஙனே? என்று ஒரு சங்கை உண்டாக, யௌவநம்வந்து தலைகாட்டுவதாகிற யௌவநப்ராதுர்ப்பாவஸமயமே எம்பெருமானிடத்தில் எப்போதுமுள்ளது என்கிறார் [வபுர்மந்தாரஸ்ய ப்ரதமகுஸுமோல்லாஸஸமய:] பெரிய பெருமாளுடைய யௌவநப்ராதுர்ப்பாவகிலமை இங்ஙனே சொல்ல

Released by Maran's Dog ,Toronto, Canada



லைம்படி யிருக்கிற தென்கிறார். திருமேனியாகிறவொரு கல்பவ்ருக்ஷத்திற்கு முதல் முதலாகப் புஷ்பம் புஷ்பிக்கும் ஸமயம்போலும். ப்ரதமகுஸுமோல்லாஸ ஸமயத்தில் கல்பவ்ருக்ஷம் எங்ஙனே இளமை வாய்ந்து சோபிக்குமோ அங்ஙனே சோபிக்கிறாரென்றபடி.

[க்ஷுமாலக்ஷ்மீப்ருங்கீஸகலகாமேணோந்மாதகமது,] முதல் பாதத்தில் புஷ்பம் ப்ரஸ்துதமாயிற்றிறே, புஷ்பந்தான் மதுவை விட்டிராதிறே, பெரிய பெருமாளுடைய யௌவநம் மதுவாகவும் பேசலாயிருக்கிறதென்கிறார். மதுவைப்பருகுமவை வண்டுகளே. திருமகளும் மண்மகளுமாகிறவண்டுகள் ஸர்வேந்திரியங்களாலும் பருகி உந்மாதமடையும்படியான மதுவோ இந்தயௌவநம்!. நித்யயௌவநவிசிஷ்டமான இந்தத்திருமேனியைப் பிராட்டிமார்கள் அநுபவித்துப் பிச்சேறுகின்றனரென்கை.

[விகாஸஸ் ஸௌகந்தர்யஸ்ரஜி ] ஸௌந்தர்யமாகிற ஒரு பூமாலை விகஸிக்கும் நிலைமையை ஒக்குமாய்த்து யௌவநாவஸ்தை. [ரஸிகதாசீதுசுளக:] ராஸிக்யமாகிற அமுதவெள்ளம் அடங்கியிருக்கும்படியைச் சொன்னவாறு. ஆசமநம் செய்வதற்குப் பாங்காக உள்ளங்கையை அமைத்துக் கொள்வது சுலகமெனப்படும்; கையைப்பரப்பிவிடுகை யன்றிக்கே அடக்கமாகச் சுருக்கிக் கொள்வதைச் சொல்வதான இந்த சுலகசப்தத்தை இங்கு ப்ரயோகித்தது மிகவுமழகியது. ராஸிக்யத்தை வெட்ட வெளிச்சமாகப் பரப்பிவிடாமல் அடக்கமாகக் காட்டிக்கொள்ளும் நிலைமையிறே யௌவநப்ராதுர்ப்பாவ ஸமயம். இங்ஙனே பட்டர் ஆழ்ந்த கருத்தை யடக்கிப் பதப்ரயோகம் செய்யுமாபோலவேயிறே பெரிய பெருமாளுடைய ராஸிக்யமு மிருக்கிறபடி. இப்படிப்பட்ட யௌவந மில்லையாகில் பெரியபெருமாளுடைய ஸௌபாக்யம் பரிமளிக்க வகையில்லையாதலால் "யுவத்வம் ரங்கேந்தோஸ் ஸுரபயதி நித்யம் ஸுபகதாம்" என்று தலைக்கட்டினார். பெருமாளுடைய பெருமைக்கு நறுமண மூட்டுகிறதாய்த்து இந்த யௌவநம். ... ... (90)

किरीटचूडरत्नराजिराधिराज्यजल्पिका ।
मुखेन्दुकान्तिरुन्मुखं तरङ्गितेव रङ्गिणः ॥९१॥

கிரீடசூடரத்நராஜிः ஆதிராஜ்யஜல்பிகா,
முகேந்துகாந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிணः. 91

| | | | |
|---|---|---|---|
| ரங்கிண: | பெரிய பெருமாளுடைய | உந்முகம் (யதாததா) | மேல்முகமாக |
| ஆதிராஜ்ய ஜல்பிகா | ஸர்வேச்வரத்வத்தைத் தெரிவிக்கின்ற | தரங்கிதா | பரம்பின |
| கிரீட சூட ரத்ந ராஜி: | திருவபிஷேகம் திருமுடிப் பட்டை ஆகிய இவற்றி லழுத்தின ரத்ந பங்க்தி யானது | முக இந்துகாந்தி: இவ | முகசந்திரனுடைய சோதியோ!. |

* * *—இனி இந்த சதகம் முடியத் திருமுடி தொடங்கித் திருவடியீறாக வடிவழகிலேயீடுபட்டுப் பேசும் ச்லோகங்களாம். திருமுடிச்சோதியி லாழ்ந்து பேசும் ச்லோகமிது திருவாய்மொழியில் "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ? (3—1—1.) என்ற ஓரடியையே இந்தச்லோகமாக்கி யருளிச் செய்திருக்கிறாரென்றுணர்க.

Released by Maran's Dog ,Toronto, Canada

[ किरीटश्च चूडा च तयोस्समाहारः ; तस्मिन् रत्नराजिः ] திருவபிஷேகத்தின் அடியில் சாத்தும் முகப் பட்டைக்கு 'சூடா' என்று பெயர். கிரீடத்திலும் திருமுகப் பட்டையிலும் அழுத்தியுள்ள ரத்நங்களின் சோதியை நோக்கினால், திருமுகமாகிற சந்திரனுடைய காந்தி ஸமூஹந்தான் மேல்முகமாகக் கிளர்ந்து முடிச்சோதியாகக் காண்கிறதோ! என்று' உத்ப்ரேக்ஷிக்கிறபடி. 'உண்மையில் திருமுக மண்டலத்திற்கு மேல் திருவபிஷேகம் கிடை

யாது, திருமுகச்சோதிதான் திருமுடியாகத் தோற்றுகிறது என்பது இந்த உத்ப்ரேக்ஷை யின் உட்கருத்து. ... ... ... (91)

शिखारत्नोद्दीप्रं दिशिदिशि च माणिक्यमकरीलसच्छृङ्गं रङ्गप्रभुमणिकिरीटं मनुमहे ।
समुत्तुङ्गस्फीतं चिदचिदधिराजश्रिय इव प्रियाक्रीडं चूडामणिमपि नितम्बं तमभितः ॥९२॥

சிகாரத்னோத்தீப்ரம் திசிதிசி ச மாணிக்யமகர்
லஸச்ச்ருங்கம் ரங்கப்ரபுமணிகிரீடம் மநுமஹே,
ஸமுத்துங்கஸ்பீதம் சிதசிததிராஜச்ரிய இவ
ப்ரியாக்ரீடம் சூடாமணிமபி நிதம்பம் தமபித꞉. (92)

| | | | |
|---|---|---|---|
| திசி திசி ச | திசைகள் தோறும் | ஸமுத்துங்க ஸ்பீதம் | உன்னதமாயும் பருத்து மிருந்துள்ள |
| சிகாரத்ந— | சூடாமணியினுல் | ப்ரிய ஆக்ரீடம் | இனிய லீலா சைலமாக |
| உத்தீப்ரம் | மிகவும் விளங்கா நிற்பதாய் | மநுமஹே | எண்ணுகிறோம்; |
| மாணிக்ய மகரீ லஸத் ச்ருங்கம் | மகரவடிவமான மாணிக்கமணியினுல் விளங்குகின்ற நுனியையுடையதுமான | தம் அபித꞉ | அந்த கிரீடத்தைச் சுற்றிலும் (இருக்கின்ற) |
| ரங்கப்ரபு மணி கிரீடம் | பெரிய பெருமாளுடைய ரத்ன கிரீடத்தை,— | சூடாமணிம் அபி | திருமுகப் பட்டையிலுள்ள ரத்னத்தையும் |
| சித் அசித் அதி ராஜ ச்ரிய꞉ | ஸகலசேதநா சேதநங்களுக்கும் நியாமகனுயிருக்கையாகிற ஸாம்ராஜ்ய லக்ஷ்மிக்கு | நிதம்பம் | அந்த க்ரீடா பர்வதத்தின் சுற்றுப் பிரதேசமாக |
| | | மநுமஹே | எண்ணுகிறோம். |

* * *—'எம்பெருமானுடைய ஸர்வேச்வரத்வ லக்ஷ்மியின் ஸ்வேச்சாவிஹாரார்த்தமாக நிருமித்ததொரு மலையோ இது!' என்னலாம்படி யிருக்கிறதாம் திருவபிஷேகம். உபயவிபூதி நாயகத்வத்துக்கு ஸூசகமாகக் கிரீடமணிந்திருக்கிறபடியைப் பேசினவாறு கிரீடத்தை மலையாகப் பேசினதற்குப் பொருத்தமான விஷயங்களை யருளிச்செய்கிருர் சிகாரத்னோத்தீப்ரம் இத்யாதி விசேஷணங்களால்.

[திசிதிசிச சிகாரத்னோத்தீப்ரம்] ரத்னங்கள் கடலில் உண்டாவது போல மலைகளிலு முண்டாவதுண்டிறே; ஆகவே எங்கும் ரத்னவொளி நிரம்பியிருக்கும் மலை. இது திருவபிஷேகத்திற்குச் சொல்லவேணுமோ? [மாணிக்யமகரீலஸத் ச்ருங்கம்] மலையின் கொடுமுடியானது மாணிக்கங்களினுல் விளங்காநிற்கும்; திருவபிஷேகமும் மகராகாரமாக அமைந்த மாணிக்கத்தினுல் விளங்குகின்ற நுனியை யுடைத்தாயிருக்கின்றது. கீழ் (83) "ஆமௌலிரத்ந மகராத்" என்றது இங்கே ஸ்மரிக்கத்தகும். [ஸமுத்துங்கஸ்பீதம்] உயர்த்தியும் செழிப்பு முடைத்தாயிருக்கும் மலை; திருவபிஷேகமும் அங்ஙனே யிரா நின்றது.

ஆக்ரீடமென்று விளையாடுவதற்குரிய தோப்புகள் மலைகள் பொய்கைகள் முதலானவற்றுக்குப் பெயர்; இங்கு மலையைக்குறிக்கும். [சூடாமணிமபி நிதம்பம் தமபித꞉.] மலையாகில் நிதம்பப்ரதேசமிருக்குமே, இங்கு அது உண்டோவென்ன; திருமுகப்பட்டையின் ஒளிப்பரப்பே கிரீடபர்வதத்திற்கு நிதம்பப்ரதேச மென்றவாறு. நிதம்பந்தம் என்று ஒரு பதமாகவுமாம். நிதம்பவத் ஆசரந்தம் என்றபடி. ... ... (92)

विहरतु मयि रङ्गिणश्चूलिकाभ्रमरकतिलकोर्ध्वपुण्ड्रोज्ज्वलम् ।
मुखममृततटाकचन्द्राम्बुजस्मयहरशुचिमुग्धमन्दस्मितम् ॥९३॥

விஹரது மயி ரங்கிணச் சூலிகா ப்ரமரகதிலகோர்த்வபுண்ட்ரோஜ்ஜ்வலம்,
முகமம்ருததடாகசந்த்ராம்புஜ ஸ்மயஹரசுசிமுக்தமந்தஸ்மிதம். (93)

| | | | |
|---|---|---|---|
| சூலிகா— | திருக்குழல்கற்றையென்ன | அம்புஜ— | தாமரைப்பூவென்ன இவற்றினுடைய |
| ப்ரமரக— | திருநெற்றியில் தொங்கும் திருக்குழலென்ன | ஸ்மய— | செருக்கை |
| திலக— | திலகாபரணமென்ன | ஹர— | போக்கடிக்கின்றதாய் |
| ஊர்த்வ புண்ட்ர— | திருமண் காப்பென்ன (இவற்றால்) | சுசி— | வெண்ணிறமாய் |
| உஜ்ஜ்வலம் | விளங்கா நிற்பதும் | முக்த— | அழகியதான |
| அம்ருத தடாக— | அம்ருதமயமான தடாகமென்ன | மந்தஸ்மிதம் | புன்முறுவலையுடையதுமான |
| சந்த்ர— | சந்திரனென்ன | ரங்கிண: முகம் | பெரிய பெருமாளுடைய திருமுக மண்டலமானது |
| | | மயி | என்னிடத்தில் |
| | | விஹரது | விஹாரம் செய்க. |

* * *—பெரிய பெருமாளுடைய திருமுகமண்டலமானது சூளிகா, ப்ரமரகம், திலகம், ஊர்த்வபுண்ட்ரம் இவற்றால் விளங்குகின்றது; அத் திருமுகமண்டலத்தினின்றுமுண்டாகின்ற புன்முறுவலானது அமுதத்தடாகம், சந்திரன், தாமரைப்பூ ஆகிய இவற்றின் செருக்கையடக்கிப் பரமபோக்யமாய் விளங்குகின்றது. இப்படிப்பட்ட புன்முறுவல் விளங்கப்பெற்ற திருமுகமண்டலமானது அடியேனுடைய நெஞ்சைவிட்டு அகலாதே யிருக்கவேணுமென்கிறார்.

'சூளிகா' என்பதற்கு—கேசபாசபந்த ஸந்நிவேசவிசேஷ மென்று ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தில் பொருளுரைக்கப்பட்டுள்ளது. 'சூடிகா' என்பதே 'லடயோரபேத:' என்கிறபடியே 'சூலிகா' என்றிருப்பதாகக்கொண்டு திருமுடியைச் சொல்லுகிறதாகக் கொள்வது நன்கு பொருந்தும். * அலகாச் சூர்ணகுந்தலா:, தே லலாடே ப்ரமரகா: * என்கிற அமரகோசத்தின்படியே திருமுகமண்டலத்தில் அலையும் திருக்குழல்கள் ப்ரமரகமெனப்படும்.

[அம்ருததடாகேத்யாதி.] அம்ருத தடாகத்திற் காட்டிலும் சந்த்ரமண்டலத்திற் காட்டிலும் தாமரைமலரிற்காட்டிலும் விஞ்சின ஆஹ்லாதஜனகமான புன்முறுவலென்று கருத்து. இப்பொருளில் 'ஸ்மயஹர' என்பது மந்தஸ்மிதத்திற்கு விசேஷணமாகும். இங்ஙனன்றிக்கே 'ஸ்நாதாநுலிப்த:' என்றவிடத்திற் போல விசேஷணோபயபதகர்மதாரய ஸமாஸமாக உரைப்பது பரமரஸமாகும். திருமுகமண்டலம் எப்படிப்பட்டதென்றால், அம்ருததடாகம், சந்திரன், கமலம் இவற்றினும் வீறு பெற்றதாயும் சுசிமுக்த மந்தஸ்மிதத்தை யுடைத்தாயுமிருக்கிறது என்றபடி.

"மயி விஹரது" என்றது—இத்திருமுகமண்டலத்திற்கு என்னுள்ளத்திலிருப்பதே பரமபோக்யமாகக்கடவது என்றவாறு. ... ... (93)

मुखपुण्डरीकमुपरि त्रिकण्टकं तिलकाश्च केसरसमास्समौक्तिकाः ।
इह रङ्गभर्तुरभियन्मधुव्रतप्रकरश्रियं भ्रमरकाणि बिभ्रति ॥९४॥

முகபுண்டரீகமுபரி த்ரிகண்டகம் திலகாச்ச கேஸரஸமாஸ் ஸமௌக்திகா:,
இஹ ரங்கபர்த்துரபியந்மதுவ்ரதப்ரகரச்ரியம் ப்ரமரகாணி பிப்ரதி. (94)

| | | | |
|---|---|---|---|
| ரங்கபர்த்து: | பெரிய பெருமாளுடைய | இஹ | இத்திருமுக மண்டலத்தில் |
| த்ரிகண்டகம் | மூன்று ரேகைகளோடு கூடின | ப்ரமரகாணி | தொங்குகின்ற திருக்குழல்கள் |
| முக புண்டரீகம் உபரி | முகாரவிந்தத்தின் பேரில் | அபியத்- | (முகபுண்டரீகத்தை) நோக்கி வருகின்ற |
| ஸமௌக்திகா: | முத்துக்களோடு கூடின | மதுவ்ரத ப்ரகர— | வண்டினங்களுடைய |
| திலகா: | திலகாபரணங்கள் | ச்ரியம் | சோபையை |
| கேஸரஸமா: | தாதுகள் போலும்; | பிப்ரதி | வஹிக்கின்றன. |

Released by Maran's Dog ,Toronto, Canada



* * *—பெரியபெருமாளுடைய திருமுகம் தாமரைப்பூப்போலிருக்கின்றது; தாமரைப்பூவில் தாதுகள் இருக்கும், வண்டுகள் வந்து மொய்க்கும்; அவை இதிலுண்டோ வென்னில், உண்டு; தாதுகள் நீண்டனவாய் நுனியில் சிறிய அரும்பு போன்ற ஆகாரங் கொண்டனவாயிருக்கும். இங்கு, திருவபிஷேகத்திற்குச் சேரத் தொங்கவிடப்பட்ட திலகாபரணங்கள் நீண்டனவாய் நுனியில் முத்துக்களை யுடையனவாயிருக்கையாலே கேஸரஸ்தாநீயங்களாகின்றன. "செங்கமலப்பூவில் தேனுண்ணும் வண்டேபோல், பங்கிகள் வந்துன் பவளவாய்மொய்ப்ப" என்றாற்போலே திருப்பவளத்திலே வந்து படிகின்ற திருக்குழல்கள் வண்டுகளொக்கும். ப்ரமரகசப்தம் நபும்ஸகலிங்கத்திலும் சில நிகண்டுகளில் ப்ரஸித்தமென்பர். இதில் முதற்பாதத்தின் பொருளை இன்னமும் தெளிவாக வல்லார்வாய்க் கேட்டுணர்க. (பங்கி--திருக்குழல்) ()

Released by Maran's Dog ,Toronto, Canada

हृदयं प्रसा(ध)दयति रङ्गपतेः मधुरोर्ध्वपुण्ड्रतिलकं ललितम् ।
अलिकार्धचन्द्रदलसंवलितामम‍ृतस्रुतिं यदभिशङ्कयते ॥९५॥

ஹ்ருதயம் ப்ரஸாதயதி ரங்கபதே மதுரோர்த்வபுண்ட்ரதிலகம் லலிதம்,
அலிகார்த்தசந்த்ரதலஸம்வலிதாம் அம்ருதஸ்ருதிம் யதபிசங்கயதே. 95

| | |
|---|---|
| யத் | யாதொரு ஊர்த்தவ புண்ட்ர மானது |
| அலிக— | திருநெற்றியாகிற |
| அர்த்த சந்த்ர தல | அர்த்த சந்த்ரகண்டத்தில் நின்றும் |
| ஸம்வலிதாம் | பெருகின |
| அம்ருதஸ்ருதிம் | அமுதப்பெருக்கை |
| அபிசங்கயதே | சங்கைக்கு விஷயமாக்குகின்றதோ, |
| தத் | அந்த, |
| ரங்கபதே: | பெரிய பெருமாளுடையதாய் |
| லலிதம் | ருஜுவாய் |
| மதுரா— | போக்யமாயிருக்கிற |
| ஊர்த்தவ புண்ட்ர திலகம் | ஊர்த்வபுண்ட்ர திலகமானது |
| ஹ்ருதயம் | நெஞ்சை |
| ப்ரஸாதயதி | ப்ரஸந்நமாக்குகிறது. |

Released by Maran's Dog ,Toronto, Canada

* * *—பெரிய பெருமாளுடைய திருநெற்றியில் விளங்கும் திவ்யோர்த்வபுண்ட்ர திலகத்தை யநுபவிக்கிறார். இத்திலகமானது அமுதப்பெருக்கோ! என்று சங்கிக்கலாம் படியிருக்கின்றது; திருநெற்றியில் அமுதப்பெருக்கு உண்டாவதற்கு ப்ரஸக்தி ஏதெனில்; [அலிகார்த்தசந்த்ரதளஸம்வலிதாம்] சந்திர மண்டலத்தில் அமுதம் உண்டாகும்; திருநெற்றியோ அர்த்தசந்த்ராகாரமா யிருக்கின்றது; ஆகவே திருநெற்றியாகிற சந்த்ரமண்டலத்தில்நின்றும் பெருகின அமுதப்பெருக்கோ! என்று சங்கிக்க அவகாச முண்டிறே. இப்படிப்பட்ட ஊர்த்வ புண்ட்ரதிலகத்தை அநுபவிக்கின்ற என்னுடைய நெஞ்சு தெளிவு பெற்றதென்றாராயிற்று.

'प्रसाधयति' என்றும் பாடமுண்டு, என்னுடைய ஹ்ருதயத்தை அலங்கரிக்கின்றது என்றபடி, ஊர்த்வ புண்ட்ரதிலகமானது பெரியபெருமாளுடைய திருநெற்றிக்கு அலங்காரமன்று, என்னுடைய ஹ்ருதயத்திற்கே அலங்காரமென்கை. ஆழ்வான் வரதராஜஸ்தவத்தில் கர்ணிகா தவ கரீச கிமேஷா...... மாநஸஸ்ய மமவா பரிகர்ம * என்றருளிச்செய்தது அநுஸந்தேயம், .... ... ... (95)

सरसीरुहे समवनाम्य मदादुपरि प्रनृत्यदलिपङ्क्तिनिभे ।
स्फुरतो भ्रुवावुपरि लोचनयोः सविलासलास्यगति रङ्गभृतः ॥९६॥

ஸரஸீருஹே ஸமவநாம்ய மதாத் உபரி ப்ரந்ருத்யதளிபங்க்திநிபே,
ஸ்புரதோ ப்ருவாவுபரி லோசநயோ: ஸவிலாஸ லாஸ்யகதி ரங்கப்ருத:. 96

Released by Maran's Dog ,Toronto, Canada



## ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் மூலமாக வெளிவந்தவை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பூர்வாசார்ய வைபவம் | 1 | 4 | 0 |
| 2. | ஆசார்ய ஹ்ருதயஸாரம் | 4 | 0 | 0 |
| 3. | திவ்ய ப்ரபந்தஸாரத்திரட்டு | 1 | 0 | 0 |
| 4. | பன்னிரு திங்களநுபவம் | 2 | 0 | 0 |
| 5. | நித்யாநுஸந்தானம்மூலம் | 1 | 0 | 0 |
| 6. | நித்யாநுஸந்தானம் உரை | 2 | 8 | 0 |
| 7. | பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை | 1 | 0 | 0 |
| 8. | ஸ்ரீராமாநுஜ பத்திரிகை முதல் தொகுதி | 4 | 0 | 0 |
| 9. | கத்யத்ரய வுரை | 1 | 2 | 0 |
| 10. | திருப்பாவையுரை | 1 | 4 | 0 |
| 11. | பகவத்விஷயம் ஈடு- முதற்பத்து | 1 | 12 | 0 |
| 12. | ஷை ஆறும்பத்து | 2 | 3 | |
| 13. | திவ்யப்ரபந்தத் திருநாமமாலை | 1 | 4 | |
| 14. | திவ்யப்ரபந்தக்கண்ணாடி | 0 | 12 | |
| 15. | விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை | 1 | 0 | |
| 16. | ஸ்ரீ தேசிக ரஹஸ்யமாலை-ஒன்று முதல் 16 ரஹஸ்யங்கள் | 1 | 0 | |
| 17. | பகவத் விஷயம் திருவாய்மொழிஈடு இரண்டாம்பத்து | 2 | 0 | |
| 18. | திருவாய்மொழி இரண்டாம் பத்து திவ்யார்த்த தீபிகை வுரை | 2 | | |
| 19. | ஆசார்ய ஹ்ருதயவியாக்கியானம் (மணவாளமாமுனிகளருளியது) 1, 2, பிரகரணங்கள் | 2 | | |

இவை கிடைக்குமிடம்:—

P. B. அண்ணங்கராசாரியர், காஞ்சீபுரம்.

கராலபாடி ராதாகிருஷ்ணன், 147, அண்ணாபிள்ளை தெரு, மதராஸ்.

ரூ. 32-0-0 அனுப்புகிறவர்களுக்கு தபால் செலவு தனிப்பட இல்லாமல் ஷை வெளியீடுகள் யாவும் கிடைக்கும்.

**If un-delivered please return to:**

**P. B. Annangaracharyar, Conjeevaram.**

130. Sri Pakkuttai Janakiammal,
c/o Ponnappa Alvar Iyengar,
North Car Street,
ALWARTHIRUNAGARI, S. I. Ry.




Released by Maran's Dog ,Toronto, Canada

Edited Printed and Published by S. R. Varadarajan, B. A., for Madras Sathgrantha Prakasana Sabha, at Sri Lakshmi Printing Works, Car Street, Salem. Editor: P. B. Annangaracharya Swami.